# இனிமையான பொழுதுபோக்கு

AVM புரொடக்ஷன்ஸ்

# வேதாள உலகம்

முழுவதும் சங்கீதமும் நாட்டியமும் நிறைந்தது

....இப்பொழுது நடைபெறுகிறது....

சென்னை...பாரகன் & பிரபாத்
மதுரை..........சென்ட்ரல்
திருச்சி..........ராஜா
கோயம்புத்தூர்....கர்னாடிக்
பெங்களூர்...சாகர், சிவாஜி & லக்ஷ்மி



தமிழ் நாட்டிலும் மற்றும் அனேக இடங்களிலும், கேரளம் மைசூர், சிலோன், ஆந்திரா முதலிய இடங்களிலும் வெற்றிகரமாக நடைபெறுகிறது.



AVM PRODUCTIONS

இப்படத்தின் பாடல்களை கொலம்பியா ரிகார்டுகளில் கேளுங்கள்

# நரம்புகள் உங்களை தூங்கவிடாமல் விழித்திருக்கும்படி செய்யும்பொழுது



சுக நித்திரை இல்லாத இரவுகள் உங்கள் ஆரோக்யத்துக்கு விரைவில் நஷ்டம் விளைவிக்கின்றன. தினம் காலையில் பலக் குறைவில்லாமலும், உற்சாகமாகவும், சுறுசுறுப்பாகவும் இருக்க நீங்கள் இரவு தோறும் அயர்ந்த சுக நித்திரை அனுபவிக்கவேண்டும். இதனால் நீங்கள் உங்களுடைய நரம்புகளை சரியான நிலைமையில் வைத்திருக்க வேண்டுமென்று ஏற்படுகிறது.

உங்கள் தேகத்தையும் மூளையையும்போல் நரம்புகளுக்கும் போஷாக்கு தேவை. இதை சுறுமணமுள்ள ருசிகரமான டானிக் உணவு பானமான "ஓவல்டின்" அளிக்கிறது. படுக்கைக்குப் போகுமுன் ஒரு கோப்பை "ஓவல்டின்" அருந்துங்கள. நரம்புகளை சமனப்படுத்தி, காலையில், பலக் குறைவில்லாமலும், உற்சாகமாகவும், சுறுசுறுப்புடனும் எழுந்திருக்கச் செய்யும்படியான அயர்ந்த நித்திரை அளிப்பதில் அது நிகரற்றது.

"ஓவல்டின்" பழுத்த பார்லிமால்ட், புதிய ஈடுடன் கூடிய பசுவின்பால், விலை மதிப்புள்ள இயற்கை விடமின்கள், மற்றும் இதர ஆகார சத்துக்களைக் கொண்டும் தயாரிக்கப்பட்டது. உங்களை வீர்யமும் ஆரோக்கியமும் உள்ளவர்களாக இருக்கச் செய்யவேண்டிய ஆகார சத்துக்களை அது உடையது. போலிகளை விலக்குங்கள்.




டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :

ரெஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிமிடெட்., தபால் பெட்டி நெ. 1205, மதராஸ். மற்றும் பம்பாய், கராச்சி, கல்கத்தாவிலும், தி இங்லிஷ் & ஸ்காட்டிஷ் ஜாயிண்ட் கோவாபரேடிங் ஹோல் சேல் சொஸைட்டி லிமிடெட்., கள்ளிக் கோட்டை (மலபார் கோஸ்டுக்கு)

## 'ஓவல்டின்'

'OVALTINE பலவிருத்தி ஆகார பானம்'



ஓவல்டின்" அயர்ந்த சுக நித்திரையை அளிக்கிறது.

OV/106

# அதிகப்படியான மைல்கள்

# Firestone

## *De Luxe* CHAMPION TYRES

## பயர்ஸ்டோன்

### டிலக்ஸ் சாம்பியன் டயர்களிலும்

இரண்டு அடுக்குகள் அதிகமான கம்-டிப்பிங் கயிறு பிணைப்புகள் கொண்டவை.

அகலமான அழுத்தமான விடாமிக் ரப்பருடன் விசேஷ முறையில் சேர்த்து செய்யப்பட்ட வரம்புகளுடன் கூடியவை.




இன்று சிறந்தது - நாளை இன்னும் சிரேஷ்டமானது

# இண்டர்நேஷனல் கடிகாரங்கள் புதியதாக வந்தவை....






எக்காலத்துக்கும் உகந்த சாக்கிக அமைப்பு—18 காரட் தங்க கேஸோடன் முட்களும் எண்களும் தங்கத்தில் உயர்த்தி அமைக்கப்பட்டவை. செ. 7697. ரூ. 678. இதே ரகத்தில் சாதா டயலுடன் ரூ. 616.

ஆண்களுக்கேற்ற பிரபலமான ஸ்டெயின் லெஸ் ஸ்டீல் கேஸோடன் கூடியது. செ. 7433. ரூ. 262.



மிகவும் உறுதியாக அமைக்கப்பட்டுள்ள ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் கேஸ மாடல். செ. 7443. ரூ. 300.



## FAVRE-LEUBA




பேவர்-லூபா & கம்பெனி லிட்.,
பம்பாய் கல்கத்தா

கற்பனைக்கோட்டையில்

அற்புத ஓவியம்!



மாடர்ன் தியேட்டர்ஸ்

# ஆதித்தன் கனவு

டைரக்ஷன்
T.R. சுந்தரம்
B.A.B.Sc.(Lond)

—: நடிகர்கள் :—

T.R. மகாலிங்கம் - அஞ்சலிதேவி
K. K. பெருமாள் - T. R. ரஜினி
K. P. கேசவன் - ஜெயகௌரி
M.G. சக்ரபாணி - P.K. சரஸ்வதி
காளி N. ரத்னம் - C.T. ராஜகாந்தம்
M.E. மாதவன் - ஏழுமலை

பாட்டு:
பாபநாசம் சிவன்

சங்கீதம்:
ஜி. ராமநாதன் ....

எம். எல். டாண்டன்.

நடனம்:
லலிதா - பத்மினி, தாராசௌத்ரி

மாடர்ன் தியேட்டர்ஸ் லிமிடெட், சேலம் - மதுரை

# நியூ டவர் டாக்கீஸ் - தஞ்சாவூர்



## திறப்பு விழா

● *22—10—48* வெள்ளிக்கிழமை தஞ்சைமா நகரிலே நியூ டவர் டாக்கீஸ் என்றொரு புதிய ஸினிமாக் கொட்டகையை ஜில்லா கலெக்டர் திரு. மாக்லாரின் துரையவர்கள் திறந்து வைத்தார்.

● கொட்டகை மிகவும் பிரமாதமாக அமைக்கப் பட்டிருக்கிறது. *1200* பேர்களுக்கு தாராளமாக வசதியுடன் இடமளிக்கக்கூடிய பிரமாதமான நவீன கட்டிடம். தரை என்பதே கிடையாது. பெஞ்சிகள், முதுகுள்ள பெஞ்சிகள், நாற்காலிகள், சோபாக்கள் தான் உட்காருவதற்கு. கொட்டகையினுள்ளே டஜன் கணக்கிலே மெர்க்குரி விளக்குகள் பொருத்தப் பட்டிருக்கிறது. மின்சார விசிறிகள் ஏராளமாக இருக்கின்றன. பட்டணத்துக் கொட்டகைகளில்கூட இந்த நியான் விளக்குகளும், விசிறிகளும் கிடையாது. உலகப் பிரசித்தி பெற்றதான Western Electric Sound Systam - Western Advanced 321-A Model இரட்டை மெஷின்கள் வைத்திருக்கிறார்கள். சப்தம் தெளிவாகவும், சுத்தமாகவும் இருக்கிறது. கண்களுக்கு குளிர்ச்சியான பவர் வெளிச்சம் படத்துக்கு ஓர் சோபையை அளிக்கிறது. ஹாலில் நடுவில் தூண் என்பதே இல்லாமல் பார்ப்பவர்களுக்கு பரவச மளிக்கிறது. உட்புறம் வெளிப்புறத் தோற்றமும் கம்பீரமாக அமைந்திருக்கிறது. மழை நாள்களிலும், வெய்யில் வேளைகளிலும் படம் பார்க்க வருவோர் அவஸ்தைப்படாமல் இருந்து கியூ வரிசையில் சென்று டிக்கட் வாங்க வசதிகளும் செய்திருக்கிறார்கள். இதுமாதிரி எங்குமேயில்லை எனலாம். அனைவரும் தவறாது பார்க்கவேண்டிய பிரமாதமான ஸினிமா. திறப்பு விழாவன்று வார்னர் பிரதர்ஸ் தயாரித்த காலம், இடம், கவிதை என்ற தமாஷ், நடன சங்கீத வர்ணப்படம் காட்டப் பட்டது.

● *24—10—48* முதல் சாந்தாராம் நடித்த டாக்டர் கோட்னிஸ் என்ற படம் பிரமாதமாக நடந்தது.

● *31—10—48* தீபாவளி தினம் முதல் ஜுபிடர் பிக்சர்ஸ் மோஹினி ஆரம்பிக்கப் பட்டு இப்பொழுது 3-வது வாரமாகவும், இதுவரை காணாத பொது மக்களின் ஆதரவுடனும் ஓடிக் கொண்டிருக்கிறது.

டிஸம்பர் 3உ வெளிவருகிறது...

ஜெமினியின்

# சக்ரதாரி

பக்த கோரா கும்பார்



நாகய்யா • புஷ்பவல்லி

சென்னை, ஸ்டார், கிரௌன் இரு

தியேட்டர்களிலும் மற்றும் ராஜதானி பூராவும் அநேக நகரங்களிலும்

# கல்கி
## பொருளடக்கம்


மலர் 8 | இதழ் 17 — நவம்பர் 21 — சர்வதாரி ஐ கார்த்திகை 6




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.




மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 17

# என்ன சேதி?

## பேரன் பிறந்தான்!

பிரிட்டிஷ் மன்னர் ஆறாவது ஜார்ஜ் மன்னருக்குப் பேரன் பிறந்து தாயும் சேயும் சௌக்கியமாக இருக்கிறார்கள் என்பதைக் கேட்டு பிரிட்டிஷ் மக்கள் சகலரும் பேரானந்தத்தில் மூழ்கி யிருக்கிறார்கள். அதன் சம்பந்தமான விவரங்களை உலகப் பத்திரிகைகள் பத்தி பத்தியாகப் பிரசுரித்து வருகின்றன. மேற்படி குழந்தையை வளர்க்கும் முறை, அதற்குக் கல்வியளிக்கும் முறை முதலியவை பற்றி இப்போது முதற் கொண்டே ஆலோசனைகள் நடைபெற்று வருகின்றன! ஐம்பது நாலு ஆண்டுகளுக்குப் பிறகு பிரிட்டிஷ் ராஜ குடும்பத்தில் பட்டத்துக்கு வாரிசாகப் பிறந்திருக்கும் குழந்தை இதுவேயாதலால், பிரிட்டனிலும் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய நாடுகளிலும் இளவரசனின் ஜனனம் பிரமாதமாகக் கொண்டாடப்படுவது இயற்கையே. மேற்படி இளவரசன் பட்டத்துக்கு வரும்போது, இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் தொடர்பு இருக்குமா என்பது வேறு விஷயம். எனினும், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துடன் இன்று தொடர்பு கொண்டுள்ள இந்தியாவும் பிரிட்டிஷ் மன்னருக்குப் பேரன் பிறந்த வைபவத்தைக் கொண்டாடி யிருக்கிறது.

## பழமையில் பற்றுதல்

உலகமெங்கும் முடியரசுகள் தகர்ந்து குடியரசும் ஜனநாயகமும் பொதுஉடைமையும் ஆட்சிபுரியும் காலம் இது. உலகமெல்லாம் பரவியுள்ள முற்போக்குப் புரட்சிக் கொள்கைகள் இங்கிலாந்தில் மட்டும் பரவவில்லை யென்று சொல்ல முடியுமா? முதலாவது சார்லஸ் என்னும் அரசனைத் தூக்கிலே போட்டு உலகத்துக்கே புரட்சி வழியைக் காட்டியவர்கள் பிரிட்டிஷார் தான்! ஆயினும் இன்றைய தினம் அரசனுக்குப் பேரன் பிறந்த வைபவத்தைப் பிரிட்டிஷார் குதூகலமாகக் கொண்டாடுகிறார்கள்! அதிலும் தொழிற் கட்சி சர்க்காரின் ஆட்சி பூரண பலத்துடன் நடைபெறும் காலத்தில் மேற்படி வைபவங்கள் நடைபெற்றிருப்பது விந்தையேயல்லவா? பிரிட்டிஷார் ஒரு அதிசயமான சாதியார் என்பதில் சந்தேக மில்லை. எவ்வளவு புதுமைக் கொள்கை வந்தாலும் அவர்கள் பழமையை அடியோடு விட்டு விடுவதில்லை. பழைய அஸ்திவாரத்தின் பேரிலேயே அவர்கள் புதிய கட்டிடத்தைக் கட்டிக் கொள்கிறார்கள். இதுதான் பிரிட்டிஷ் சாதி இன்று வரை அடைந்திருக்கும் வெற்றியின் இரகசியம் போலும்!

## வேறு வழியில்லை

ஹைதராபாத் விஷயத்தில் இந்திய சர்க்கார் காட்டிய பொறுமையைப் பலர் தவறாக நினைத்தது போல, பிரஞ்சு இந்தியப் பிரதேசங்கள் விஷயத்திலும் இந்திய சர்க்கார் காட்டி வரும் பொறுமையைப் பலர் தவறாக நினைத்துக் கொண்டு வீண் பிரசாரம் செய்து வருகிறார்களாம். ஆனால், பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு ஐரோப்பாவிலிருந்து திரும்பிவந்த பின் பிரஞ்சு இந்தியப் பிரதேசங்கள் விஷயமாகக் கூறியுள்ள அபிப்பிராயம் அத்தகைய பிரசாரகர்களின் விஷமத்துக்கு முற்றுப் புள்ளி வைத்து விடும் என்பது நிச்சயம்.

"பிரஞ்சு இந்தியாவுக்கு எதிர்காலத்தில் ஒரே ஒரு வழி தான் உண்டு. இந்தியாவுடன் ஐக்கியம் அடைவது தான் அந்த வழி" என்று சந்தேகத்துக்கு இடமின்றி நமது தலைவர் கூறியிருக்கிறார். ஜவாஹர்லால்ஜி சமீபத்தில் பாரிஸில் பிரஞ்சு சர்க்கார் தலைவர்களுடன் பேசி வந்த பின் அவ்வாறு கூறியிருப்பது குறிப்பிடத் தக்கதாகும். பிரஞ்சு இந்தியா விஷயத்தில் இந்திய சர்க்கார் நிதானமாகவும் நேர்மையுடனும் நடந்து கொண்டு வருகையில், பிரஞ்சு இந்திய அதிகாரிகள் மாத்திரம் நிதானம் இழந்து அடக்கு முறைகளில் இறங்கி யிருப்பது மமதையா அல்லது முட்டாள்தனமா என்பது தான் தெரியவில்லை!

# கல் எறிய உரிமை எது?

ஒரு துஷ்டனை ஜனங்கள் எல்லாரும் சேர்ந்து கற்களால் அடித்துக் கொன்று விடவேண்டும் என்று கோர்ட்டார் தீர்ப்புக் கூறினர். அதற்கிணங்க, ஜனங்களும் கற்களை வைத்துக்கொண்டு அவனை அடித்துக் கொல்வதற்கு நின்றுகொண்டிருந்தார்கள்.

அந்தச் சமயத்தில் ஒரு மகான் அவ்விடத்துக்கு வந்து சேர்ந்தார்.

கொலைத் தண்டனைக்கு உள்ளானவன் துஷ்டன்தான் என்பதை அவர் ஒப்புக் கொண்டார். அவனைக் கற்களால் அடித்துக் கொல்ல வேண்டும் என்பதையும் ஒப்புக் கொண்டார். ஆனால், அவர் விதித்த நிபந்தனை ஒன்றே ஒன்றுதான்.

அதாவது வாழ்க்கையில் ஓர் அக்கிரமம் கூட,—ஒரு தவறு கூடச் செய்யாதவரே, தண்டனையடைந்தவன் மீது முதன் முதலாகக் கல்லை விட்டெறிய வேண்டும் என்பதுதான் அவர் விதித்த நிபந்தனை ஆகும்!

மேற்படி நிபந்தனை அங்கு கூடியிருந்த ஜனங்களெல்லோரையும் தாக்கி வாரிப் போட்டது. ஒருவரையொருவர் பார்த்து விழித்தார்கள். தண்டனையடைந்தவன் மீது முதல் கல்லை எறிய எவரும் துணியவில்லை.

எப்படித் துணிவர்? ஓர் அக்கிரமமாவது தவறாவது செய்யாதவர் எவரேனும் அந்தக் கூட்டத்தில் இருந்தால்தானே!

* * *

இரண்டாவது உலக மகாயுத்தம் நடந்தபோது ஜப்பானின் பிரதம மந்திரியாக இருந்த ஜெனரல் ஹிதேகி தோஜோ உள்பட ஏழு ஜப்பானியப் பிரமுகர்களுக்குச் சர்வதேசக் கோர்ட்டார் தூக்குத் தண்டனை விதித்திருக்கிறார்கள். மற்றும் பதினாறு பேருக்கு ஜன்ம தண்டனையும் இருவருக்கு நீண்டகால சிறைத் தண்டனையும் விதித்திருக்கிறார்கள்.

ஆனால் நீதிபதிகள் சகலரும் ஏகமனதாக மேற்படி தண்டனை விதிக்கவில்லை என்பது ஒருவிதத்தில் உலக ஜனங்களுக்கு ஆறுதலைக் கொடுக்கக் கூடிய விஷயமாகும். அவ்வாறு நீதிபதிகள் எல்லோரும் ஏகமனதான முடிவுக்கு வராதது, உலகில் நீதி இன்னும் செத்து விடவில்லை என்பதையே காட்டுகிறது.

இந்திய நீதிபதி ஸ்ரீ ராதா விநோத பால், ஹாலந்து நீதிபதி டாக்டர் பி. வி. ரோலிங், பிரஞ்சு நீதிபதி பர்னார்ட் இம் மூவரும் வேறுபட்ட அபிப்பிராயம் கொண்டு தீர்ப்புக் கூறியிருக்கின்றனர்.

சென்ற மகா யுத்தத்தினால் எழும்பிய புழுதி மண்டலம், அதாவது குரோதம், மாற்சரியம், ஆவேசம் முதலியன இன்னும் அடங்கவில்லை. குணமுள்ள விடத்தும் குற்றம் காணும் விபரீதம் ஒழியவில்லை. கலங்கிய அறிவு தெளிவடையவில்லை. காலச் சக்கரம் சுழன்று நிலைமை சீர்படும்போது, இன்று தண்டனைக்குள்ளானோர் பின்னர் புகழடையவும் இன்று புகழுடன் திகழ்வோர் பின்னர் தண்டனைக்குள்ளாகவும் நேரும்.

மேற்படி வாக்கியங்களே இந்திய நீதிபதியினுடைய தீர்ப்பின் சாரம் எனலாம்.

ஆயிரத்து மூந்நூறு பக்கங்கள் அடங்கிய ஸ்ரீ பாலின் தீர்ப்பு, சர்வதேச நீதி சாஸ்திரத்தில் சாசுவதமான சிறப்பிடம் பெற்று விளங்கும் என்பதில் சந்தேகம் என்ன?

மேலே குறிப்பிட்ட இருபத்தைந்து எதிரிகளில் ஒருவர் மீதாவது ஒரு குற்றம் கூட இல்லை என்று கூறி அவர்களெல்லோரையும் விடுதலை செய்ய வேண்டும் என்று இந்திய நீதிபதி வற்புறுத்தியிருக்கிறார்.

வஞ்சம் தீர்க்க வேண்டும் என்ற ஆத்திரம் ஒழிய வேண்டும் என்பதையும், உலகம் பெருந் தன்மையுடனும் தயாள புத்தியுடனும் தர்ம நியாயத்துடனும் நடந்து கொள்ள வேண்டும் என்பதையும் சுட்டிக் காட்டியிருக்கிறார்.

சர்வதேச இராணுவக் கோர்ட்டு சர்வதேச நீதிச் சபையாகத் திகழ வேண்டுமேயன்றி, அந்தப் போர்வையில் சர்வதேச அரசியல் தந்திர சபையாக அதாவது அரசியல் நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ளும் சபையாக மாறிவிடக் கூடாதென்றும் ஸ்ரீ பால் எச்சரிக்கை செய்திருக்கிறார்.

உலகில் ஜப்பானியர் வர்க்கமே மிகவும் உயர்ந்ததென்று கூறிக்

கொண்டு பிற நாடுகளை ஆக்கிரமித்துக் கொள்ளச் சதி செய்தனர் என்பது ஜப்பான் தலைவர்கள்மீது சாட்டப்பட்ட குற்றங்களில் ஒன்று.

இதே குற்றத்தைச் சில நூற்றாண்டுகளுக்கு முன்பே வல்லரசுகள் செய்ய ஆரம்பித்துவிட்டன; இன்றும் செய்து வருகின்றன.

ஆஸ்திரேலியாவிலும், அமெரிக்காவிலும், தென்னாப்பிரிக்காவிலும் இன்னும்கூட நிறவெறி பகிரங்கமாகத் தலைவிரித்தாடி வருகிறது.

அமெரிக்காவில் நிறவேற்றுமை காரணமாக நீக்ரோக்களை உயிருடன் கொல்லும் வழக்கம் இன்னும்கூட நின்றபாடில்லை!

தென்னாப்பிரிக்காவில் நிறபேதம் காரணமாக வெள்ளையர்கள் இந்தியர்களைக் கொடுமை செய்வது சர்வதேச மேடையிலே இன்றும் சிரிப்பாய்ச் சிரித்து வரும் விஷயமாகும்.

ஆஸ்திரேலியாவின் நிறவெறிதான் ஜப்பானின் ஆக்கிரமிப்புக்கு முக்கிய காரணம் என்றும், வெள்ளையர்கள் உயர்ந்த ரக விசேஷப் பிறவிகள் என்று ஆஸ்திரேலிய சர்க்கார் பகிரங்கமாகக் கூறி ஆசியர்களை அவமதித்ததே ஜப்பானின் ஆத்திரத்துக்கு அஸ்திவாரமாக அமைந்தது என்றும் இந்திய நீதிபதி குறிப்பிட்டிருப்பதைச் சரித்திரம் அறிந்த எவரும் மறுக்க முடியாது.

ஜனநாயகத்தையும், ஜனங்களின் சுயநிர்ணய உரிமையையும் பாதுகாப்பதற்காக இரண்டு உலக மகா யுத்தங்கள் நடந்தும்கூட, இன்னும் பல வல்லரசுகள் பிற நாடுகளை ஆக்கிரமித்துக்கொண்டு அவைகளைப் படாதபாடு படுத்தி வருகின்றன.

எனவே வர்க்க வெறி, ஆக்கிரமிப்புக் கொடுமை இவை சம்பந்தப்பட்ட வரையில் அமெரிக்கா, பிரிட்டன், ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய நாடுகள்தான் அசல் குற்றவாளிகள். அவைகளைக் 'காப்பி' யடித்ததுதான் ஜப்பான் செய்த குற்றமாகும்.

யுத்தக் கைதிகள் விஷயத்தில் ஜப்பானியர் சகிக்க முடியாத அட்டூழியங்கள் புரிந்தனர் என்பதும், அதனால் ஏராளமான யுத்தக் கைதிகள் மாண்டனர் என்பதும் ஜப்பானியத் தலைவர்களின்மீது சாட்டப்பட்ட மற்றொரு குற்றமாகும்.

ஹிரோஷிமா, நாகஸாகி இவ்விரு ஜப்பானிய நகரங்கள் மீதும் அணுகுண்டுப் பிரயோகம் செய்து நிரபராதிகளான ஜனங்களுடன் அவற்றை அடியோடு அழித்த அமெரிக்காவின் காட்டுமிராண்டித் தனத்தை, எந்தக் கோர்ட் விசாரிக்கப் போகிறது?

* * *

அமெரிக்கக் கடற்படைத் தளபதி அட்மிரல் செஸ்டர் நிமிட்ஸ் சமீபத்தில் உலகமே நடுக்கிடக் கூடிய ஒரு விஷயத்தை வெளியிட்டார்.

"அணுகுண்டுப் பிரயோகத்தினால் அமெரிக்கா வெற்றி பெறவில்லை. அதற்கு முன்பே ஜப்பானியர் 'சமாதானத்துக்கு வருகிறோம்', 'சமாதானத்துக்கு வருகிறோம்' என்று அலறத் தொடங்கிவிட்டனர். எனவே, அணுகுண்டைப் பிரயோகிக்காமலிருந்தாலும் அமெரிக்கா வெற்றி பெற்றிருக்கும் என்பது நிச்சயம்" என அட்மிரல் நிமிட்ஸ் கூறினார்.

அதாவது அமெரிக்கா கொடிய குற்றவாளி என்பதை அமெரிக்கக் கடற்படைத் தளபதி தாம் அறியாமலே ஒப்புக் கொண்டிருக்கிறார்!

யுத்தத்தில் வெற்றி பெறுவதற்காக அணுகுண்டைப் பிரயோகம் செய்ததே மகா கொடுமையென்றும் மன்னிக்க முடியாத குற்றமென்றும் உலகம் கருதி வருகையில், அணுகுண்டின் சக்தியைப் பரிசோதனை செய்து பார்ப்பதற்காக அமெரிக்கா பதினாயிரக்கணக்கான ஜப்பானியரை அடியோடு ஹதம் செய்த மாபெரும் குற்றத்துக்குத் தண்டனை என்ன?

விஞ்ஞானிகள் தங்களுடைய பரிசோதனைகளை எலி முதலிய ஜந்துக்கள் மீது பிரயோகித்துப் பார்ப்பதுபோல், அமெரிக்கத் தலைவர்கள் அணுகுண்டைப் பரிசோதனை செய்து பார்ப்பதற்காக ஜப்பானியரை உபயோகித்தனர் என்பது அமெரிக்கக் கடற்படைத் தளபதியின் கூற்றிலிருந்து ஸ்பஷ்டமாகிறது!

அணுகுண்டுப் பிரயோகத்தை எவ்வாறு எக்காலத்திலும் உலகம் மன்னிக்க முடியாதோ, அதுபோலவே ஜப்பானியத் தலைவர்களைத் தூக்கிலிடுவதையும் உலகம் மன்னிக்க முடியாத காலம் வராமற் போகாது.

எனவே, ஜப்பானியத் தலைவர்களை விடுதலை செய்வதன் மூலமாவது அமெரிக்கா தான் செய்த மகத்தான குற்றத்துக்கு ஓரளவு பிராயச்சித்தம் செய்து கொள்ளலாம்!

# அரைப்படி அரிசி

இந்திய நாட்டை அன்னிய சர்க்கார் ஆண்டு வந்த வரையில் நம்முடைய துன்பங்கள் எல்லாவற்றுக்கும் அன்னிய சர்க்கார் மீதே பொறுப்புச் சுமத்தி வந்தோம். "பிரிட்டிஷ் ஆட்சி தொலைந்தால் எல்லாம் சரியாகிவிடும்" என்று சொல்லி வந்தோம்.

பிரிட்டிஷ் ஆட்சி ஒரு வழியாகத் தொலைந்தது; ஆனால் எல்லாம் சரியாய்ப் போகிற வழியாகக் காணப்படவில்லை.

எத்தனையோ துன்பங்கள் மக்களை வாட்டி வருகின்றன. அவற்றுக்கு யார் மேல் குற்றம் சாட்டுவது என்பதைப் பற்றி யோசிக்க வேண்டியிருக்கிறது.

சில துன்பங்களுக்கு உலகத்து அரசியல் சூழ்நிலையின் மீது குற்றம் சுமத்தலாம். சில கஷ்டங்களை யு. என். ஓ. சபையின் மீது தூக்கிப் போடலாம். வேறு சில தொல்லைகளுக்கு பாகிஸ்தான் பிரிவினையைக் காரணமாகக் குறிப்பிடலாம். சிலவற்றுக்கு அந்தப் பொல்லாத பண வீக்கத்தைக் காரணமாகச் சொல்லலாம். ரஸாக்கர் மீதும் கம்யூனிஸ்ட்கள் மீதும் சிற்சில கஷ்டங்களைச் சுமத்திப் பார்க்கலாம்.

ஆனால் இந்தச் சென்னை மாகாணத்து ஜனங்கள் தினம் தினம் அரைப்படி அரிசிக்கு ஆலாய்ப் பறக்க வேண்டியதாயிருக்கும் நிலைமைக்கு வேறு யார் மீதும் குற்றம் சொல்லிப் பயனில்லை. ஜப்பானிலே அமெரிக்கர் போட்ட அணுகுண்டைக்கூடக் காரணமாகச் சொல்வதற்கில்லை. வடகிழக்கு 'மான்ஸூன்' என்னும் பூதத்தின் பேரில் பழிபோடவும் முடியாது. ஏனெனில், இந்த வருஷத்தில் அந்த பூதம் 'ஸ்ட்ரைக்' செய்து விடாமல் ஏதோ முன்பின்னாக மழையைக் கொண்டு வந்து பொழிந்து கொண்டிருக்கிறது.

எனவே, சென்னை மாகாணத்தில் அரிசிப் பஞ்சத்தின் முழுப் பொறுப்பையும் நமது சென்னை மாகாண சர்க்கார், அதாவது சர்க்காரை நடத்தும் காங்கிரஸ் மந்திரிகள், மட்டுமே தாங்கியாக வேண்டும்.

* * *

சென்னை மாகாணத்தில் மறுபடியும் படிப்படியாக உணவுப் பொருள் கண்ட்ரோல் அமுலுக்கு வந்துவிடப் போகிறது.

நெல் முதலிய தானியங்களைக் கட்டாயமாகக் கொள் முதல் செய்ய மறுபடியும் சர்க்கார் உத்தரவு பிறந்து விட்டது.

மூடிய ரேஷன் கடைகளை யெல்லாம் மறுபடியும் திறக்கப் போகிறார்கள்.

தனிப்பட்ட தானிய வியாபாரிகள் கடையைக் கட்டப் போகிறார்கள்.

உணவுக் கண்ட்ரோலும் ரேஷன் முறையும் மறுபடியும் அமுலுக்கு வருவது நன்மையா, கெடுதலா என்பதைப்பற்றி நாட்டு மக்களிடையே இரண்டுவித அபிப்பிராயங்கள் இருப்பது இயல்பே யாகும்.

பட்டணங்களில் வசித்து மாதச் சம்பளமோ தினக் கூலியோ பணமாகப் பெறுகிறவர்கள் ரேஷன் இருந்தால்தான் நல்லது என்று அபிப்பிராயப் படுவார்கள்.

கிராமாந்தரத்து மக்கள், — முக்கியமாக உணவு உற்பத்தி செய்யும் விவசாயிகள், — உணவுக் கண்ட்ரோலை எதிர்ப்பார்கள்

கண்ட்ரோலையும் ரேஷனையும் ஆதரிக்கும் நகர வாசிகள், அந்த முறைகளின் மீது காதல் கொண்டு அவற்றை ஆதரிக்கவில்லை.

அரிசி முதலிய உணவுப் பொருள்கள் தாராளமாகவும் சுலபமாகவும் கிடைக்காத நிலைதான் ரேஷனை ஆதரிக்கிறார்கள்.

**வேண்டியபோது வேண்டிய அளவு அரிசி முதலிய உணவுப் பொருள்கள் தாராளமாகக் கிடைப்பதா யிருந்தால் யாருமே கண்ட்ரோலையும் ரேஷனையும் ஆதரிக்க மாட்டார்கள்.**

* * *

இந்த இதழ் வட்ட மேஜைப் பகுதியில் விட்டலாபுரம் ஸ்ரீ வி. எஸ். வெங்கடாச்சாரியார் அவர்கள் 'கண்ட்ரோல் ராஜ்ய'த்தின் தொல்லைகளைப்பற்றித் தக்க புள்ளி விவர ஆதாரங்களுடன் எழுதி யிருக்கும் கடிதத்தைக் காணலாம். இந்தக் கடிதம் லட்சக் கணக்கான விவசாயிகளின் கருத்தைப் பிரதிபலிக்கிறது.

உணவுக் கட்டுப்பாடு சம்பந்தமாக 1943௵ ஜூலை 10உ (சென்னை மாகாணத்தில் அட்வைஸரி ஆட்சி நடந்துகொண்டிருந்த காலத்தில்) நாம் எழுதி யிருந்த தலையங்கத்தின் சில முக்கிய பகுதிகளைக் கீழே எடுத்துப் பிரசுரிக்கிறோம்:—

**"துணி மணிக் கட்டுப்பாட்டைப்போல் உணவுப் பொருள்களின் கட்டுப்பாடு அவ்வளவு**

சுலபமானதல்ல. உணவுப் பொருள்களை உற்பத்தி செய்வதில் கோடிக்கணக்கான விவசாயிகள் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களிடம் உணவுப் பொருள்களை வாங்கிச் சாப்பிடுகிறவர்களும் கோடிக் கணக்கில் இருக்கிறார்கள். விவசாயிகளிடமிருந்து உணவுப் பொருள்கள் வாங்கி மற்றவர்களுக்கு விற்பதில் ஈடுபட்ட வியாபாரிகளோ லட்சக்கணக்கானவர்கள்.

அப்படியிருக்கும்போது, உணவுப் பொருள்களின் விஷயத்தில் கட்டுப்பாடு விதிகளை அமுல் நடத்துவது எவ்வளவு கஷ்டமானது என்று சொல்ல வேண்டியதில்லை, கஷ்டமானது என்பது மட்டுமில்லை: உணவுப் பொருள் விஷயத்தில் அதிகாரிகள் தலையிடுவதால் எவ்வளவோ நஷ்டங்களும் உண்டு. ஓர் உதாரணம் சொல்கிறோம்:—

ஒரு பிரதேசத்தில் அரிசிப் பஞ்சம் நேரிடுகிறது. அந்தப் பிரதேசத்தின் சர்க்கார் அதிகாரி நெல் விளையும் நெல்லூரிலிருந்தோ, கிருஷ்ணாவிலிருந்தோ ஐயாயிரம் மூட்டை அரிசி தருவிக்கிறார். அரிசி மூட்டைகள் ரயிலடிக்கு வந்து சேர்கின்றன. அவற்றை இறக்கி எங்கே கொண்டு போய் வைப்பது என்று அப்புறந்தான் யோசனை உண்டாகும். கிடங்குகளைத் தேடுவார்கள். கிடங்குகள் தேடிப் பிடிக்கும் வரையில் மூட்டைகள் ரயில்வே ஸ்டேஷனில் கிடக்கும். நம்முடைய அதிர்ஷ்டத்துக்கு, அந்தச் சமயம் பார்த்து மழை கொட்டு, கொட்டு என்று கொட்டும். அரிசி நனைந்து மடித்துப் போகும்.

மடித்துப் போன அரிசியை என்ன செய்வது? அந்த சர்க்கார் அதிகாரி கை நஷ்டம் அடைய முடியுமா? அல்லது சர்க்கார் கணக்கிலே தான் எழுத முடியுமா?—இரண்டும் முடியாது. ஆகையினால் மடித்துப் போன அரிசியையும் பொது ஜனங்களின் தலையிலே தான் கட்டவேண்டியிருக்கும். வேறு வழியில்லாமல் அவர்களும் வாங்கிப் போவார்கள்.

ஆனால், தனிப்பட்ட வியாபாரிகளின் கையில் அரிசி வியாபாரம் இருந்தால் இம்மாதிரி விபரீதமெல்லாம் நேராது. முதலில், கிடங்கு தயாரில் இல்லாமல் வியாபாரிகள் அரிசி தருவிக்கமாட்டார்கள். அப்படி அரிசி வீணானால் நஷ்டத்தை அந்த வியாபாரிகளே ஏற்றுக் கொள்வார்கள்.

உண்மையில், உணவுப் பொருள்களின் விஷயத்தில் செய்ய வேண்டியதென்ன?

இந்த நாட்டின் மக்களுக்கு உணவுப் பொருள் எவ்வளவு தேவையோ, அதில் 100-க்கு 90-பங்கு தற்சமயம் தேசத்தில் விளைவதாக வைத்துக் கொள்ளலாம். எனவே, சர்க்காரும் ஜனங்களும் ஒத்துழைத்து ஒரு பெரும் பிரயத்தனம் செய்து பாக்கி 10 பங்கையும் விளைவித்து விடவேண்டும். — இதுதான் செய்ய வேண்டிய காரியம். * * *

ஒரு பெரு முயற்சி செய்து விவசாயத்தைப் பத்தில் ஒரு பங்கு அதிகமாக்கி விட்டால், உணவுப் பஞ்சம் தீர்ந்து விடுகிறது. அப்போது உணவுக் கட்டுப்பாடு விதிகள் ஒன்றுமே தேவையில்லை. விளையும் இடத்திலிருந்து விளையாத இடங்களுக்குத் தானியங்கள் தாராளமாகப் போக மட்டும் வசதிகள் வேண்டும். மற்றப்படி விலைவாசிகள் எல்லாம்தானே சீர்ப்பட்டுச் சரியான விகிதத்துக்கு வந்து விடும்.

அதற்குப் பதிலாக, 90 பேருக்கு ஆனதை 100 பேருக்குப் பிரித்துக் கொடுக்கும் சர்க்கார் முயற்சியினால், தேச மக்கள் அடையும் கஷ்ட நஷ்டங்கள் ஒருபுறமிருக்க, இன்னும் ஒரு விபரீத விளைவும் ஏற்பட இடம் இருக்கிறது.

ஜனங்கள் அன்றாடம் அரைப்படி அரிசிக்கு நடத்தவேண்டியிருக்கும் போராட்டத்திலேயே தங்கள் சக்தியையெல்லாம் செலவிட்டு விடுவார்கள்! * * *

ஜனங்கள் காலட்சேபத்துக்குப் பணம் சம்பாதிப்பதுடன், அன்றாடம் அரைப்படி அரிசிக்கும் போராட வேண்டியிருந்தால், அவர்களால் வேறு ஒன்றுமே செய்ய முடியாது. தினசரி கடைக்குப் போய் மல்யுத்தம் செய்து அரிசி வாங்கி வந்து சமைத்துச் சாப்பிடுவதிலேயே அவர்களுடைய சக்தி தீர்ந்து விடுகிறது. 'அப்பாடா!' என்று உட்கார்ந்து விடுகிறார்கள். * * *"

*மேற்கண்ட அபிப்பிராயங்கள் இன்றைக்கும், காங்கிரஸ் மந்திரிகளின் ஆட்சி நடந்து கொண்டிருக்கும் காலத்திலும், பொருத்தமாகவே இருக்கின்றன. அந்த அபிப்பிராயங்களை மாற்றிக் கொள்ள எவ்விதக் காரணமும் ஏற்படவில்லை.*

*சென்னை மாகாணத்து மக்களுக்கு வேண்டிய உணவு தானியத்தில் 100 க்கு 90 பங்கு இப்போது இந்த மாகாணத்திலேயே விளைந்து வருகிறது என்று திட்டமாகத் தெரிய வந்திருக்கிறது.*

*பற்றாக் குறை 100 க்கு 10 விகிதந்தான்.*

*எனவே, நூற்றுக்குப் பத்து விகிதம் தானிய விளைவை அதிகமாக்கி விட்டால், உணவுக் கண்ட்ரோல், கட்டாய தானியக் கொள்முதல், ரேஷன் கடைகள், வெளி நாட்டு இறக்குமதி, தானியப் பிச்சைக்கு வட நாட்டுக்குப் போவது முதலிய தொல்லைகள் ஒன்றுமே வேண்டியதில்லை.*

*அமெரிக்கா தேசத்தில் யுத்தம் நடந்து கொண்டிருந்த காலத்தில், — அமெரிக்க மக்களின் வாலிபப் பிராயத்தினர் அனைவரும் யுத்த சேவையிலும் தளவாட உற்*

பத்திரிக்கையில் ஈடுபட்டிருந்த காலத்தில்,— அமெரிக்கர்கள் உணவுப் பொருள் விளைவை 100 க்கு 30 வீதம் பெருக்கினார்கள்.

1942-ம் வருஷத்தில் தொடங்கி 1945-ம் வருஷத்துக்குள் அத்தகைய அற்புதத்தை அமெரிக்கர்கள் சாதித்தார்கள்.

யுத்தம் நடந்து கொண்டிருந்த போதும் யுத்தம் முடிந்த பிறகும் கிரேட் பிரிட்டனில் உணவுப் பொருள் விளைவை 100 க்கு 40 பங்கு அதிகப்படுத்தி யிருக்கிறார்கள்.

சென்னை மாகாணத்தில் நாம் 100க்கு 10 வீதம் உணவு உற்பத்தியைப் பெருக்கக் கையினாலாகாமல், கண்ட்ரோல், கட்டாய தானியக் கொள் முதல், கள்ள மார்க்கெட் என்னும் தொடர் சுழல்களில் அகப்பட்டுக் கொண்டு திண்டாடி வருகிறோம்.

காங்கிரஸ் மந்திரிசபை ஏற்பட்டு மூன்று வருஷம் ஆகிவிட்டது. கிராமத்தில் பிறந்து வளர்ந்து விவசாயத்தில் ஊறித்திளைத்த பிரமுகர் ஒருவர் தற்சமயம் பிரதம மந்திரி பதவி வகிக்கிறார்.

ஆனாலும் 100க்கு 10 வீதம் உணவு உற்பத்தியை நம்மால் பெருக்க முடியவில்லை. நூற்றுக்குப் பத்துப் பங்கு வீதம் புதிய நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டு வந்து நமது பற்றாக்குறையைத் தீர்க்கலாம். இப்போது சாகுபடியாகும் நிலங்களில் 100-க்கு 10 பங்கு வீதம் விளைவை அதிகமாக்கினாலும் அதே பலன் கைகூடும். அல்லது இரண்டு வழிகளையும் கையாண்டு ஒவ்வொன்றிலும் நூற்றுக்கு ஐந்து வீதம் உற்பத்தியைப் பெருக்கி விமோசனம் அடையலாம்.

எனினும், சென்ற ஏழு வருஷமாக, அட்வைஸரி கவர்ன்மெண்டும் காங்கிரஸ் சர்க்காரும் கையாண்ட முறைகளினால் மேற்கூறிய பலன் கிட்டவில்லை.

* * *

சென்ற மூன்று வருஷத்தில் 100க்கு எத்தனை பங்கு உணவு உற்பத்தி அதிகமாகி யிருக்கிறது என்று சென்னை சர்க்கார் நிபுணர்களில் யாராவது திட்டமாய்ச் சொல்ல முடியுமா ? முடியவே முடியாது.

இத்தனை மணங்கு பிண்ணாக்கு விற்றோம், இத்தனை இரும்புக் கலப்பைகள் விற்றோம், இத்தனை கிணறு வெட்டப் பணம் கடன் கொடுத்தோம் என்று வேண்டுமானால் கணக்குச் சொல்லுவார்கள்.

ஆனால் மொத்தத்தில் இந்த மாகாணத்தில் இவ்வளவு தரிசு நிலம் புதிதாகச் சாகுபடிக்கு வந்தது, இவ்வளவு உணவு தானியம் அதிகப்படியாக உற்பத்தியாயிற்று என்று சொல்லுவதற்கு யாரும் இல்லை.

ஆகவே தான் உணவுக் கண்ட்ரோல் ராட்சதன் மக்களுடைய சக்தியை யெல்லாம் உறிஞ்சுவதற்கு மறுபடியும் வருகிறான்.

* * *

“ உணவுக் கண்ட்ரோல் முறை அகில இந்தியாவுக்கும் உரியதல்லவா ? சென்னை மாகாணத்துக்கு மட்டும் வரவில்லையே ?” என்று கேட்பார்கள்.

தேசம் முழுவதும் சேர்த்துப் பார்க்கும் போது உணவுப் பொருள் பற்றாக்குறை இருப்பதால் இந்திய சர்க்கார் உணவுக் கண்ட்ரோல் முறையை அமுல் நடத்தச் சொல்கிறார்கள்.

பற்றாக்குறை இருக்கும் போது உணவுக் கண்ட்ரோல் இல்லாம லிருந்தால் அதனால் பல தொல்லைகள் ஏற்படுகின்றன. அந்தத் தொல்லைகளை முன்னிட்டு இந்திய சர்க்கார் உணவுக் கண்ட்ரோல் முறையை அமுலுக்குக் கொண்டு வரச் சொல்கிறார்கள்.

உணவுப் பற்றாக் குறை இல்லாமற் போனால் உணவுக் கண்ட்ரோலுக்கும் அவசியம் இல்லாமற் போகும்.

இந்தியாவில் இன்றைய தினம் பற்றாக் குறை இருப்பதற்கு முக்கிய காரணமா யிருப்பது சென்னை மாகாணம்.

மற்ற மாகாணங்களில் இவ்வளவு கேவல மான நிலைமை இல்லை. இப்படி ‘ லபோ லபோ ’ என்று பிற மாகாணங்கள் அடித்துக் கொள்வது மில்லை. சென்னைக்குக் கொஞ்சம் கொடுக்கவும் மற்ற மாகாணங்கள் தயாரா யிருக்கின்றன.

ஆகவே, பற்றாக்குறையைப் போக்குவதற்கும் உணவுக் கண்ட்ரோலின் அவசியம் இல்லாமற் செய்வதற்கும் முக்கியமான பிரயத்தனம் சென்னை மாகாணத்திலே தான் நடைபெற வேண்டும்.

நமது மாகாண மந்திரிகள், சட்ட சபை அங்கத்தினர்கள், உத்தியோகஸ்தர்கள் முதலியோரால் அத்தகைய பிரயத்தனத்தை இதுகாறும் வெற்றி பெற நடத்த முடிய வில்லை யென்பது கண் கூடு.

அதற்கு வேண்டிய ஊக்கமோ, உற்சாகமோ, திறமையோ அவர்களிடம் இல்லை யென்பது பிரத்யட்சம்.

நமது மந்திரிமார்கள் முதலியோர் அத்தகைய ஊக்கமும் உற்சாகமும் திறமையும் பெறும் வரையில் இம்மாகாண மக்கள் கஷ்டப்பட்டே யாகவேண்டும் ; உணவுக் கண்ட்ரோலினால் ஏற்படும் அல்லல்களை அனுபவித்தே தொலைக்க வேண்டும்.

# ஸ்வாமி ராமானந்தர்

புகழ்பெற்ற ஐரிஷ் தேசபக்தரும் மாஜி பிரதம மந்திரியுமான டிவேலரா சுதந்திரப் போரில் ஈடுபட்டிருந்த காலத்தில், அவரைப் பார்க்க யாரோ ஒரு வெளிநாட்டு நிருபர் அவருடைய வீட்டுக்குப் போயிருந்தாராம்.

வீட்டில் இருந்த மூதாட்டியைப் பார்த்து "டிவேலரா இருக்கிறாரா?" என்று அவர் கேட்டாராம்

"இல்லை; அவன் ஜெயிலுக்குப் போயிருக்கிறான். கொஞ்சம் உட்கார்ந்திருங்கள்; வந்து விடுவான்!" என்றாளாம் டிவேலராவின் தாயார்.

சிறைக்குப் போவதும் வெளியே வருவதும் அந்தக் காலத்திலே டிவேலராவுக்கு அவ்வளவு சாதாரணமாக இருந்து வந்தது!

இது ஹைதராபாத் சமஸ்தான காங்கிரஸ் தலைவரான ஸ்வாமி ராமானந்த தீர்த்தருடைய வாழ்க்கைக்கும் பொருந்தும். சென்ற பத்து வருஷ காலத்தில் ஸ்வாமிஜியின் வாழ்க்கையில் பெரும் பகுதி சிறையிலேயே கழிந்திருக்கிறது.

இன்று ஹைதராபாத்திலே ஹிந்து முஸ்லிம்கள் எல்லோருடைய நன்மதிப்புக்கும், அன்புக்கும் மரியாதைக்கும் உரிய ஒரு தலைவர் உண்டு என்றால், அவர் ஸ்வாமி ராமானந்த தீர்த்தர்தான். ஹைதராபாத் அரசியலைப் பற்றி அவருடைய அபிப்பிராயம் என்னவோ, அதுதான் அங்கு வாழும் ஒன்றரைக் கோடி மக்களுடைய அபிப்பிராயமுமாகும். ஸ்வாமிஜியிடம் அவர்களுக்கு அவ்வளவு நம்பிக்கை.

ஒரு காவி வேட்டி, ஒரு மேலங்கி, ஒரு அங்கவஸ்திரம்,—இவற்றைத் தவிர ஸ்வாமிஜிக்கு வேறு சொத்துக் கிடையாது. ஹைதராபாத் மக்களுடைய க்ஷேமமே அவருடைய வாழ்க்கை இலட்சியம்.

ருஷ்யாவிலே ஜார் மன்னன் நடத்திய கொடுங்கோன்மையைப் பற்றிக் கவி பாரதியார் பாடியிருக்கிறார். அந்தக் கொடுங்கோல் மன்னன் தேசம் முழுவதையுமே ஒரு பெரிய சிறைச்சாலையாக ஆக்கினான். ஆனால் அந்த ஜார் மன்னனின் கொடுங்கோன்மை எந்த மூலைக்கு என்று சொல்லும்படியாக ஹைதராபாத் சமஸ்தானத்தில் ஆட்சி நடந்து வந்தது. சுதந்திரம் என்று யாருமே அங்கு வாய் திறக்க முடியாது. இத்தகைய சமஸ்தானத்துக்குள்ளே ஸ்வாமி ராமானந்த தீர்த்தர் பத்து வருஷத்திற்கு முன்பு சுதந்திர ஜோதியை எடுத்துக் கொண்டு பிரவேசித்தார்.

வாயில்லாப் பூச்சிகளாக வாழ்ந்து வந்த ஹைதராபாத் மக்களுக்கு அவர் சுதந்திரம் என்னும் மகா மந்திரத்தைக் கற்றுக் கொடுத்தார். சுதந்திரப் போராட்டத்துக்கு மக்களைத் தயாராக்கினார். ஹைதராபாத் சர்க்கார் சீற்றங் கொண்டு, "வாட்டி யுன்னைச் சிறையில் மடக்குவேன்" என்று ஸ்வாமி ராமானந்தரைப் பல முறை சிறைக்குள் தள்ளினர். கொலைக்கும் கொள்ளைக்கும் கொஞ்சங்கூட அஞ்சாத காஸிம் ரஸ்வி கூட்டம் அவருடைய உயிரை வாங்கப் பலமுறை முயன்றது. ஆனால் ஸ்வாமிஜி கொஞ்சமும் கலங்கவில்லை. தம்முடைய தொண்டைத் தொடர்ந்து செய்து கொண்டே வந்தார். கடைசியில், அவர் வெளியில் இருப்பது பெரும் ஆபத்து என்று அஞ்சி, எழெட்டு மாதங்களுக்கு முன்பு சமஸ்தான சர்க்கார் அவரைப் பிடித்துச் சிறையில் போட்டனர். இந்திய ராணுவம் ஹைதராபாத் மீது படையெடுத்துச் சென்று மேற்படி சமஸ்தானத்தை விடுவித்த பிறகு, சென்ற செப்டம்பர் மாதம் 17-ம் தேதியன்று ஸ்வாமிஜி விடுதலை செய்யப்பட்டார்.

ஸ்வாமிஜி வருஷத்தில் பாதி நாட்கள் சிறையில் இருப்பார். மீதிப் பாதி நாட்கள் உண்ணாவிரதம் இருப்பார். இது அவர் வழக்கம். இனிமேல் அவர் சிறைக்குப் போக வேண்டிய அவசியமோ, உண்ணாவிரதம் இருக்கவேண்டிய அவசியமோ ஏற்படாது. சுதந்திர ஹைதராபாத்தைப் புனர் நிர்மாணம் செய்வதற்கு அவருடைய சேவை அவசியமாக இருக்கும்.

ஸ்வாமிஜிக்கு இப்போது நாற்பத்தைந்து வயதுதான் ஆகிறது என்பதைப் பார்க்கும் போது ஹைதராபாத் மக்கள் அதிர்ஷ்டக்காரர்கள் என்றுதான் சொல்லவேண்டும்.






## 54. ஸ்மட்ஸ் மோசடி

**கா**ந்தி மகான் அடிபட்டு டோக் பாதிரியாரின் வீட்டில் சிகிச்சை பெற்றுவந்த காலத்தில் காந்தியின் குடும்பத்தார் போனிக்ஸில் வசித்து வந்தார்கள். ஸ்ரீமதி கஸ்தூரி பாயும் குழந்தைகளும் காந்திஜி அடிபட்ட செய்தி அறிந்ததும் அளவில்லாத கவலை அடைந்தார்கள். உடனே பறந்து சென்று காந்திஜியைப் பார்க்க வேண்டுமென்று அவர்களுடைய உள்ளம் துடித்தது. ஆனால் அது சாத்தியப்படவில்லை. போனிக்ஸிலிருந்து ஜோகானிஸ்பர்க் போவதற்கு வேண்டிய ரயில் சத்தப் பணம் அவர்களிடம் இல்லை!

காந்திஜிக்கு உடம்பு குணமாகிப் பிரயாணம் தொடங்கலாம் என்று ஏற்பட்டதும் உடனே போனிக்ஸுக்குப் போக விரும்பினார். போனிக்ஸ், நேட்டால் மாகாணத்தில் டர்பனுக்குக் கொஞ்ச தூரத்தில் உள்ளது என்பது நினைவிருக்கலாம். காந்திஜி நேட்டாலுக்குப் போகவேண்டிய அவசியமும் ஏற்பட்டிருந்தது.

கறுப்புச் சட்டமானது, டிரான்ஸ்வால் மாகாணத்தில் செய்யப்பட்டது. டிரான்ஸ்வாலைச் சேர்ந்த 13,000 இந்தியர்களையே அது பாதித்தது. நேட்டாலை அந்தச் சட்டம் பாதிக்கவில்லை. ஆயினும் கறுப்புச் சட்டத்தை எதிர்த்து காந்திஜி நடத்திய இயக்கத்தில் நேட்டாலிலும் கேப்டவுனிலும் தென்னாப்பிரிக்கா முழுவதிலுமுள்ள எல்லா இந்தியர்களுக்கும் சிரத்தை இல்லாமற் போகவில்லை. அந்த இயக்கத்தின் போக்கை எல்லா இந்தியர்களும் கவனித்துக்கொண்டு வந்தார்கள். ஏனெனில் இன்றைக்கு டிரான்ஸ்வாலில் ஏற்பட்ட சட்டத்தைப் போல் நாளைக்கு மற்ற மாகாணங்களிலும் ஏற்படலாமல்லவா? டிரான்ஸ்வாலில் கறுப்புச் சட்டத்தை எதிர்த்து இந்தியர்கள் வெற்றிபெற்றால் அது நேட்டால் இந்தியர்களின் பலத்தையும் வளர்க்கும். டிரான்ஸ்வால் சத்தியாக்கிரஹம் தோல்வியடைந்தால் தென்னாப்பிரிக்கா இந்தியர்கள் அனைவரையும் அது பலவீனப்படுத்தும்.

ஜனபதி ஸ்மட்ஸுடன் செய்துகொண்ட ராஜி ஏற்பாடு நேட்டால் இந்தியர்களின் மனதிலும் சந்தேகங்களையும் கலக்கங்களையும் உண்டாக்கி யிருப்பதாகக் காந்திஜி அறிந்தார். முதன் முதலில் காந்தி மகாத்மாவை ஆதரித்து நின்றவர்கள் டர்பன் இந்தியர்களே யல்லவா? ஆகையால் நேரே டர்பனுக்குப் போய் அங்குள்ள இந்தியர்களைப் பார்த்துப் பேசி அவர்களுடைய சந்தேகங்களைத் தீர்த்துவிட்டுப் பிறகு போனிக்ஸுக்குப் போகக் காந்திஜி தீர்மானித்தார்.

டர்பனுக்குக் காந்திஜி போய்ச் சேர்ந்த அன்று அங்கே ஒரு பொதுக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இங்கேயும் பட்டாணியர்களால் ஏதேனும் தொல்லை நேரலாம் என்று காந்திஜியின் நண்பர்கள் சந்தேகித்தார்கள். எனவே, தக்க முன்னேற்பாடு செய்திருந்ததுடன், டர்பன் போலீஸ் தலைவரான பழைய அலெக்ஸாண்டருக்கும் தெரிவித்திருந்தார்கள்.

இன்னும் சில நண்பர்கள் காந்திஜிக்கு எச்சரிக்கை செய்தார்கள். பொதுக் கூட்டத்தில் அவர் தாக்கப்படலாமென்றும் ஆகையால் கூட்டத்துக்கே அவர் வரவேண்டாம் என்றும், கூட்டத்தை ரத்துசெய்து விடலாம் என்றும் சொன்னார்கள். ஆனால் மகாத்மா இந்த யோசனைகளை ஒப்புக் கொள்ளவில்லை. "பொது ஊழியம் செய்ய வருகிறவன் புகழ்ச்சியைப் பெறுவதற்குத் தயாராயிருப்

பதுபோலவே இகழ்ச்சிக்கும் தயாராயிருக்க வேண்டும். பூமாலைக்கும் தயாரா யிருக்க வேண்டும்; கல்மாரிக்கும் சித்தமா யிருக்க வேண்டும். பொது மக்களின் கண்டனத்துக்குத் தப்பி ஓட முயலுதல் கூடாது. நான் கூட்டத்துக்கு அவசியம் போய்த் தான் தீருவேன். கடவுளுடைய விருப்பம் போல நடக்கும்'' என்று சொல்லிவிட்டார்.

மாலை எட்டு மணிக்குப் பொதுக் கூட்டம் ஆரம்பமாயிற்று. காஸ் விளக்குகள் போட்டிருந்தன. சேத் தாவூத்முகம்மது என்பவர் தலைமை வகித்தார். இந்தியர்களுடைய நியாயமான சந்தேகங்கள் எல்லாம் தீரும்படியாக மகாத்மா தாம் ராஜிக்கு ஒப்புக் கொண்டதன் காரணங்களை விளக்கிக் கூறினார். காந்திஜியின் பேச்சு முடிந்து தலைவர் முடிவுரை கூறிக் கொண்டிருக்கும் சமயத்தில் ஒரு பட்டாணியன் கையில் ஒரு பெரிய தடியுடன் மேடையை நோக்கி ஓடி வந்தான். அதே சமயத்தில் விளக்குகள் எல்லாம் அணைக்கப்பட்டன. கூட்டத்தில் பெருங் குழப்பம் உண்டாயிற்று. ஆனால் மேடையில் இருந்த பிரமுகர்கள்—தலைவர் தாவூத் முகம்மது உள்பட—காந்திஜியைத் தங்களுக்கு மத்தியில் நிறுத்திச் சூழ்ந்து நின்று பாதுகாத்தார்கள். காந்திஜியின் நண்பர்களில் ஒருவர் இம்மாதிரி நேரும் என்று எதிர்பார்த்து கைத்துப்பாக்கி ஒன்று கொண்டு வந்திருந்தார். அதை அவர் எடுத்து ஆகாயத்தை நோக்கி வெற்று வேட்டு ஒன்று போட்டார். இதனால் கூட்டத்தில் குழப்பம் இன்னும் அதிகமாயிற்று.

பார்ஸி ருஸ்டம்ஜியின் முன் யோசனையின் பயனாகச் சில நிமிஷ நேரத்தில் சூபரின்டெண்ட் அலெக்ஸாண்டர் அனுப்பிய போலீஸ் படையினர் வந்து சேர்ந்தனர். அவர்கள் காந்திஜியைச் சூழ்ந்து நின்று கூட்டத்தின் வழியாகப் புகுந்து அவரைப் பார்ஸி ருஸ்டம்ஜியின் வீட்டுக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தனர்.

மறுநாள் காலையில் மகாத்மாவின் யோசனையின்படி பார்ஸி ருஸ்டம்ஜி டர்பனிலிருந்த பட்டாணியர்களையெல்லாம் தம்முடைய வீட்டுக்கு வரவழைத்தார். காந்திஜியிடம் நேரே அவர்களுடைய சந்தேகங்களைக் கேட்டுத் தீர்த்துக் கொள்ளும்படி சொன்னார். மகாத்மாவும் அவர்களுக்கு எவ்வளவோ விளக்கமாக உண்மையை எடுத்துரைத்தார். ஆயினும் பயன் ஏற்படவில்லை. காந்திஜி ஏதோ துரோகம் செய்து விட்டார் என்ற எண்ணம் அந்தப் பட்டாணியர்களின் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது. அதை அசைக்கவே முடியவில்லை.

தம்பி! நம்முடைய காலத்தில் ஹிந்துக்களிலே சில மகா மூடர்கள் மகாத்மா காந்தி ஹிந்து சமூகத்துக்குத் துரோகம் செய்து விட்டதாக நினைத்தார்கள் அல்லவா? அதன் விபரீத பலனை இவ்வருஷம் ஜனவரி 30ந் தேதி கண்டோம் அல்லவா? இன்னமுங்கூட அத்தகைய பரம முட்டாள்தனமான எண்ணத்தைப் போக்கிக் கொள்ளாத அறிவிலிகள் சிலர் இருப்பதை நாம் காண்கிறோமல்லவா?

இப்படியிருக்கும் போது முரட்டுப் பட்டாணியர்களின் மனதிலிருந்த சந்தேகம் போகாததில் வியப்பு என்ன?

எவ்வளவு விளக்கிச் சொல்லியும் பயனில்லை எனக் கண்ட மகாத்மா ''இந்த மாதிரி சந்தேகம் என்கிற வியாதி ஒருவருடைய மனதில் ஏற்பட்டு விட்டால், அதை வெறும் பேச்சினாலோ விவாதத்தினாலோ மாற்ற முடியாது. செய்யும் செயலினாலேதான் சந்தேகத்தைத் தீர்க்க வேண்டும்'' என்னும் முடிவுக்கு வந்தார்.

அத்தகைய செயல் புரிவதற்குரிய சந்தர்ப்பமும் கூடிய விரைவில் வந்தது. அந்த விஷயத்துக்குப் போவதற்கு முன்னால் மகாத்மா காந்தியின் போனிக்ஸ் பிரயாணத்தைப் பற்றிச் சொல்லி விடுகிறேன்.

* * *

டர்பன் பொதுக்கூட்டம் நடந்த மறுநாள் மாலை காந்திஜி போனிக்ஸுக்குப் புறப்பட்டார். முதல்நாள் அவரைப் பொதுக்கூட்டத்தில் பாதுகாக்க முஸ்தீபு செய்திருந்தவர்கள், இப்போது போனிக்ஸுக்கும் தாங்கள் வரவேண்டும் என்றார்கள். அவர்களை வரவேண்டியதில்லை யென்று காந்திஜி சொல்லிப் பார்த்தார். அவர்களுக்குப் போனிக்ஸில் நல்ல சாப்பாடு கிடைப்பது துர்லபம் என்றும் எச்சரிக்கை செய்தார். அந்த நண்பர்கள் ''சாப்பாடே கிடைக்காவிட்டாலும் பாதகமில்லை. இந்தச் சமயத்தில் தங்களைப் பிரிந்திருக்க முடியாது!'' என்றார்கள். காந்திஜியும் வேறு வழியின்றிச் சம்மதம் கொடுத்தார்.

இவ்விதம் காந்திஜியைப் பாதுகாக்கப் புறப்பட்ட கூட்டத்தின் தலைவர் யார் தெரியுமா? அவர் ஒரு தமிழர்! நேட்டாலில் பிறந்த கிறிஸ்துவத் தமிழர்! அவருடைய பெயர், ஜாக் முதலியார். குஸ்திச் சண்டையில் அவர் கைதேர்ந்தவர். தென்னாப்பிரிக்காவிலுள்ள யாரும், — வெள்ளைக்காரனு

விலும் கறுப்பு மனிதனுயினும்,—குஸ்திச் சண்டையில் ஜாக் முதலியை ஜயிக்க முடியாது என்று அச்சமயம் அவருக்குப் புகழ் ஏற்பட்டிருந்தது.

"தங்களுடன் இருக்கும்போது எங்களுடைய கைவரிசை ஒன்றையும் காண்பிக்க மாட்டோம்!" என்று வாக்குறுதி கொடுத்துவிட்டு ஜாக் முதலியாரும் அவருடைய தோழர்களும் போனிக்ஸுக்குப் புறப்பட்டுச் சென்றார்கள்.

தென்னுப்பிரிக்காவில் மழை இல்லாத காலங்களில் எல்லாம் காந்திமகான் திறந்த வெளியிலே தூங்குவது வழக்கம். போனிக்ஸ் ஆசிரமத்திலும் திறந்த வெளியிலேயே படுத்துத் தூங்கினர். ஜாக் முதலியாரும் அவருடைய தோழர்களும் முறை போட்டுக்கொண்டு இரவெல்லாம் காந்திஜியைக் காவல் புரிந்தார்கள். பட்டாணியர்கள் இராத்திரியில் கள்ளத்தனமாக வந்து தூங்குகிற காந்திஜியைத் தாக்கி விடப் போகிறார்களே என்பதற்காகத்தான். "என்னுடைய உயிர் எனக்கு அவ்வளவு பெரிதன்று. என்னுடைய சகோதரர் கையினால் சாக நேர்ந்தால் அதுவே என் பாக்கியமாகும்" என்று காந்திஜி சொன்னார். இதையெல்லாம் ஜாக் முதலியார் கோஷ்டி கேட்கவில்லை. "உங்களுக்கென்ன கவலை? நீங்கள் பாட்டுக்குத் தூக்கம் வரும்போது தூங்குங்கள்!" என்று சொல்லிவிட்டு, காந்திஜியின் கண்ணில் படாமல் தூரத்தில் நின்று அவர்கள் காவல் புரிந்தார்கள்.

தம்பி! இதைப் படிக்கும்போது, காட்டிலே இராமரும் சீதையும் தூங்குங்கால் இலக்ஷ்மணன் கண்விழித்துக் காவல் புரிந்தது நினைவு வருகிறதல்லவா?

* * *

போனிக்ஸில் காந்திஜி வசித்த காட்களில் தளபதி ஸ்மட்ஸுடன் செய்து கொண்ட ராஜியைப் பற்றி "இண்டியன் ஒபினியன்" பத்திரிகையில் பல கட்டுரைகள் எழுதினர். கேள்வி பதில் ரூபத்தில், ஆட்சேபங்களைக் குறிப்பிட்டுச் சமாதானமும் எடுத்துக் கூறினர். டிரான்ஸ்வால் இந்தியர்கள் சம்பந்தப்பட்ட வரையில், அவர்கள் காந்திஜியிடம் பூரண நம்பிக்கை வைத்து அவர் காட்டிய வழியை மனப்பூர்வமாகப் பின்பற்றினர்கள் என்று சீக்கிரத்திலேயே தெரியவந்தது. மிகச் சில தினங்களுக்குள்ளே டிரான்ஸ்வால் இந்தியர்கள் அனைவரும் தாங்களே வலியச்சென்று பதிவு செய்து கொண்டு விட்டார்கள். எனவே, ராஜி உடன் படிக்கையில் இந்தியர்கள் தங்களுடைய பங்கை நிறைவேற்றி விட்டார்கள்.

ஆனால் டிரான்ஸ்வால் சர்க்கார் தங்களுடைய பங்கை நிறைவேற்றினர்களா என்றால், அது தான் இல்லை. தளபதி ஸ்மட்ஸ் மோசம் செய்து விட்டார்!

தளபதி ஸ்மட்ஸ் பெரிய கைகாரர். உலகத்து மகா இராஜ தந்திரிகளில் ஒருவர். 1907-ம் வருஷத்தில் டிரான்ஸ்வால் அரசாங்கம் அவருடைய கைக்குப் போயிற்று. சென்ற வருஷத்தில் மிஸ்டர் மாலன் தேர்தலில் ஜயிக்கும் வரையில் சுமார் 40 வருஷ காலம் தென்னுப்பிரிக்கா சர்க்காருக்கு அவரே தலைவராயிருந்து வந்தார். அவருடைய இராஜ தந்திரத்தையும் தீர்க்காலோசனையையும் பற்றி இன்றைக்கு உலகமெல்லாம் புகழ் பரவியிருக்கிறது.

அப்படிப்பட்ட தளபதி ஸ்மட்ஸ் தமது அரசியல் வாழ்க்கையின் ஆரம்பத்தில் காந்திஜியின் சத்தியாக்கிரஹ ஆயுதத்துடன் போராட நேர்ந்தது. சத்தியாக்கிரஹத்தை வெற்றி கொள்வதற்கு தளபதி ஸ்மட்ஸ் அரசியல் தந்திரத்தையும் சூழ்ச்சியையும் கையாண்டார். காந்திஜியிடம் மிக மரியாதையாகப் பேசி ராஜி ஏற்பாட்டுக்கு இணங்கச் செய்தார். காரியம் முடிந்த பிறகு, மோசடியான சூழ்ச்சியைக் கையாண்டு வாக்குறுதிக்குப் பங்கம் செய்தார்.

ஆனால், "வாக்குறுதியை மீறுகிறேன்" என்றோ, "மோசடி செய்கிறேன்" என்றோ பட்டவர்த்தனமாகச் சொன்னரா? பெரிய இராஜ தந்திரி யாயிற்றே! தாம் சரியான காரியத்தையே செய்வதாகப் பாவனை காட்டிக் கொண்டு வாக்குறுதியை மீறினர்.

எல்லா இந்தியர்களும் பதிவு செய்து கொண்டானதும், கறுப்புச் சட்டத்தை ரத்து செய்வதாகச் சொல்லியிருந்தார் அல்லவா? அதன்படி அவர் செய்யவில்லை. கறுப்புச் சட்டத்தை அப்படியே வைத்துக் கொண்டு வேறு இரண்டு மசோதாக்களைச் சட்டசபையில் கொண்டுவந்தார்.

இவற்றில் ஒரு மசோதா, தாங்களாகப் பதிவு செய்து கொண்ட இந்தியர்களின் பதிவுப் பத்திரத்தை அங்கீகரித்துக் கொண்டு ஆசியாக்காரர் சட்டத்தின் விதிகளிலிருந்து அவர்களுக்கு விலக்கு அளித்தது.

இன்னொரு மசோதா, இனிமேல் ஆசியாக்காரர்கள் பதிவு செய்து கொள்வதற்கு வேண்டிய விதி முறைகளை வகுத்தது.

தளபதி ஸ்மட்ஸின் சூழ்ச்சித் திறமை இப்போது தெரிகிறதல்லவா?

"நாங்களே பதிவு செய்து கொண்ட இந்தியர்களைக் கறுப்புச் சட்டம் பாதியாமல் செய்துவிட்டேன். இனிமேல் வரும் இந்தியர்கள் சம்பந்தமாக நான் எந்த நிபந்தனையையும் ஒப்புக்கொள்ளவில்லையே?" என்று ஸ்மட்ஸ் சொல்லிவிடலா மல்லவா?

தளபதி ஸ்மட்ஸின் இந்த இராஜ தந்திரம் காந்தி மகானுக்கு அர்த்தமாகவில்லை. கறுப்புச் சட்டம் அடியோடு ரத்து செய்யப்படும் என்று காந்திஜியும் மற்ற டிரான்ஸ்வால் இந்தியர்களும் நம்பினார்கள். அந்த நம்பிக்கை பொய்யாகி விட்டது. அதற்கு விரோதமாக ஸ்மட்ஸ் காரியம் செய்தார். ஸ்மட்ஸின் அந்தக் காரியத்தை 'மோசடி' என்றே மகாத்மாவும் மற்ற இந்தியர்களும் அச்சமயம் கருதினார்கள். இதைப் பற்றிக் காந்தி மகான் எழுதியிருப்பதாவது :—

"தளபதி ஸ்மட்ஸ் மிக்க தந்திரசாலி என்றும் அவரை நம்ப வேண்டாம் என்றும் சில இங்கிலீஷ் நண்பர்கள் எனக்கு எச்சரிக்கை செய்திருந்தார்கள். இரண்டு கட்சியும் தங்களுக்குச் சாதகம் என்பதாக நினைத்துக் கொள்ளும்படி அவர் வாசகங்களைப் புனைவார் என்றும், பிறகு தனக்கு இஷ்டமான ஒரு புதிய பொருளைக் கற்பிப்பார் என்றும் சொல்லியிருந்தார்கள். அவர்களுடைய எச்சரிக்கை உண்மைதான் என்று இப்போது தெரிந்தது. தளபதி ஸ்மட்ஸ் எங்களை மோசம் செய்து விட்டதாகவே அப்போது நானும் மற்ற இந்தியர்களும் நம்பினோம். ஆனால் இப்போது யோசித்துப் பார்க்கும்போது 'மோசடி' என்று சொல்வதில் சந்தேகம் ஏற்படுகிறது. நோக்கத்தில் மோசடி இல்லாதவரையில் அதை மோசடி என்று சொல்ல முடியாதல்லவா? 1913-14-ம் வருஷத்தில் ஸ்மட்ஸிடம் எனக்கு ஏற்பட்ட அநுபவம் அவர் பேரில் நல்ல எண்ணம் உண்டாக்கியது. அவர் 'யோக்கியர்' என்றும் 'நாணயவான்' என்றும் இன்றைக்கும் நான் கருதி வருகிறேன். ஆகையால் 1908-ம் ஆண்டில் ஸ்மட்ஸ் வேண்டுமென்று மோசடி செய்ததாக இப்போது நான் சொல்ல முடியாது."

1924-ம் வருஷத்தில் மகாத்மா மேற்கண்டவாறு எழுதினார். ஆனால் 1908-ம் ஆண்டில் மகாத்மா காந்திக்கும் மற்ற டிரான்ஸ்வால் இந்தியர்களுக்கும் ஸ்மட்ஸ் செய்த 'மோசடி' பெரும் வியப்பையும் கலக்கத்தையும் அளித்தது.

நிலைமை இன்னதென்று தெரிந்தவுடனே காந்திஜி சத்தியாக்கிரஹக் கமிட்டியின் கூட்டத்தைக் கூட்டினார். கூட்டத்தில் சிலர், "முன்னமே சொன்னோமே, கேட்டீர்களா? இப்படித்தான் நீங்கள் யாரையும் சுலபத்தில் நம்பிவிடுகிறீர்கள். பிறகு ஏமாந்து போகிறீர்கள்!" என்றார்கள்.

அவர்களுக்குக் காந்திஜி தமது கட்சியை எடுத்துச் சொன்னார். "எதிரியை நம்புவது சத்தியாக்கிரஹத்தின் முதல் தர்மம். பிறகு எதிரி வாக்கை மீறினால் அதற்குத் தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும். அப்படியில்லாமல், உலகத்திலே எல்லாருமே அயோக்கியர்கள் என்று எண்ணிக் கொண்டு சத்தியாக்கிரஹத்தைக் கையாள முடியாது. பிறரை நம்புவது என்னிடமுள்ள குறை என்று நீங்கள் நினைக்கலாம். அப்படி நினைத்தால், அந்தக் குறையுடனேயே என்னை உங்கள் தலைவனாக ஏற்றுக் கொள்ளவேண்டும். என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டார். எல்லாரும் ஒரு முகமாகக் காந்திஜியை மீண்டும் தலைமை ஏற்கும்படியும், போரைத் திரும்பத் தொடங்கி நடத்தும்படியும் கேட்டுக் கொண்டார்கள்.

# அந்தமான் கைதி

பகீரதன்

"அந்தமான் கைதி" என்று சொன்னவுடன் "எந்த மான் கைதி? இரண்டு வாரத்துக்கு முன்னே கீழ்ப்பாக்கத்திலே ஒருவரை முட்டிக் காயப்படுத்தி விட்டு ஓடி விட்டதே அந்த மானா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டார் ஒரு நண்பர்.

"நல்ல கேள்வி கேட்டீர்? மானுமில்லை மீனுமில்லை. அந்தமான் என்ற தீவிலுள்ள ஆயுள் தண்டனை பெற்ற கைதி ஒருவன் தன்னுடைய கதையைச் சொல்லுகிறான்" என்றேன்.

"எங்கே?" என்று ஆவலுடன் கேட்டார்.

"அந்தமான் தீவிலே தான" என்றேன்.

"நன்றாக இருக்கிறது. அந்தமான் தீவுக்குக் கப்பலேறிச் சென்று அந்தக் கைதி சொல்லும் கதையைக் கேட்கச் சொல்லுகிறீரா?" என்று கேட்டார்.

"அந்தக் கைதி சாதாரணக் கைதி இல்லை. பெண் இனத்தின் உயர்வுக்காக அரும்பாடு பட்டவன். தன்னுடைய கதையைச் சுவை குன்றாமல் மிகவும் ரஸமாகச் சொல்லுகிறான். அவன் சொல்லும் கதையைக் கேட்டால் நீர்மட்டுமென்ன? இந்தத் தமிழகமே பெண்கள் விஷயத்தில் இன்னும் கொஞ்சம் தாராளமாகவும் தயவுடனும் நடந்து தலை நிமிர்ந்து நிற்கலாம். அந்தக் கதையைக் கேட்பதற்கு நீர் அந்தமான் தீவுக்குக் கப்பலேற வேண்டாம். சென்னை வால்டாக்ஸ் ரோடிலுள்ள ஒற்றைவாடைத் தியேட்டருக்குப் போனாலே போதும்" என்றேன்.



கைதி தன் கதையைச் சொல்லுகிறான்

"அது நாடகக் கொட்டகை அல்லவா?" என்று வியப்புடன் கேட்டார்.

"நாடகக் கொட்டகை தான். 'அந்தமான் கைதி'யும் ஒரு நாடகந்தான்."

"ஓஹோ! நாடகம் எப்படி இருக்கிறது?" என்று ஒரு மாதிரி முகத்தை வைத்துக் கொண்டு கேட்டார்.

"காதல், மோதல் ஒன்றுமேயில்லாத ஒளவைக் கிழவியின் கதையையே அபாரமாக நடித்துப் பெயர் வாங்கிய டி. கே. எஸ். சகோதரர்களின் கையில் ஒரு சமூக சீர்திருத்தக் கதை கிடைத்து விட்டால் கேட்க வேண்டுமா?" என்றேன்.

"சீர்திருத்த நாடகமா? வேண்டவே வேண்டாம். வேறு எதைப் பற்றியாவது பேசுங்கள்" என்று சொல்லி முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டார்.

"ஏன் அப்படிப் பயப்படுகிறீர்கள்?" என்று கேட்டேன்.

"நான் ஒரு சீர்திருத்த நாடகத்துக்கு என் குடும்பத்தோடு சென்றிருந்தேன். நாடகம் ஆரம்பித்த சற்று நேரத்துக்கெல்லாம் என் மனைவி தலையைக் குனிந்து கொண்டாள். எனக்கு ஏனடா இங்கு வந்தோம் என்று ஆகிவிட்டது. அவ்வளவு அஸங்கியமாகவும் விரசமாகவும் சம்பாஷணையும் காட்சிகளும் இருந்தன."

"டி. கே. எஸ். சகோதரர்கள் அப்படிப் பட்டவர்கள் அல்ல. சிறந்த பண்பாடு உடையவர்கள். மிக்க உயர்தரமாக இந்த 'அந்தமான் கைதி' என்ற நாடகத்தை நடத்துகிறார்கள். ஆகையால் ஒரு மனைவியை மட்டுமல்ல; மூன்று மனைவியை அழைத்துக் கொண்டு போய்க்கூட நாடகத்தைப் பார்க்கலாம். ஆனால் நாலாவது மனைவியை அழைத்துப் போகும்படி நான் சொல்லமாட்டேன்!" என்றேன்.

• • •

தந்தையை இழந்துவிட்ட நடராஜன் என்ற வாலிபனுக்குக் காமாட்சி என்ற தாயாரும் லீலா என்ற தங்கையும் இருக்கிறார்கள். லீலா பாலு என்ற வாலிபனைக் காதலிக்கிறாள். காமாட்சியின் சொந்த சகோதரனை திவான்பகதூர் பொன்னம்



திவான் பகதூர் பொன்னம்பலம் பிள்ளை

பலம் பிள்ளை என்ற ஐம்பத்தைந்து வயதுக் கிழவர் லீலாவை நாலாவது மனைவியாகக் கலியாணம் செய்து கொள்ள ஆசைப்படுகிறார். நடராஜனைச் சூழ்ச்சி செய்து ரங்கூனுக்கு வேலைக்கு அனுப்பி விடுகிறார்கள். காமாட்சி திவான் பகதூரின் வற்புறுத்தலினாலும் பணத்தாசையினாலும் லீலாவை அவருக்கு மணஞ் செய்து வைத்து விடுகிறான். அந்தக் கிழப் பொன்னம்பலம் லீலாவைச் சவுக்கால் அடித்துக் கொடுமைப் படுத்துகிறார். ரங்கூனிலிருந்து திரும்பி வந்த நடராஜன் தன் தங்கையின் துன்பத்தைக் கண்டு சகியாமல் பொன்னம்பலம் பிள்ளையைக் கொன்று விட்டு ஓடி விடுகிறான். கொலைக் குற்றம் நிரபராதியான பாலுவின்மீது சுமத்தப்பட்டு அவனுக்குத் தண்டனை விதிக்கும் சமயம், நடராஜன் கோர்ட்டில் தோன்றி உண்மையைக் கூறி ஆயுள் தண்டனை பெற்று அந்தமான் கைதியாகிறான்.

நாடகத்தில் நடிக்கும் ஒவ்வொருவரும் 'பளிச்' 'பளிச்' என்று பேசுகிறார்கள். உணர்ச்சி ததும்ப நடிக்கிறார்கள். வெகு விறு விறுப்புடன் சம்பவங்கள் ஓடுகின்றன. கண் மூடிக் கண் திறப்பதற்குள் வீடு நந்தவனமாகிறதும் நந்த வனம் கோர்ட்டாகிறதும் கோர்ட்டு அந்தமான் தீவாகிறதும் அந்தத் தீவிலே கைதி நடராஜன் மனக் கண்ணிலே லீலாவும் பாலுவும் தோன்றுவதும் வெகு அருமை.

பாலுவைக் கலியாணம் செய்துகொள்ள முடியாமல் மனம் உடைந்த லீலா தன் உயிரை மாய்த்துக் கொள்ளத் தீர்மானித்துக் கிணற்றில் விழச் செல்லுகிறாள். அப்போது அவள் மனதிலே தன் தமையன் நடராஜன் நினைவு தோன்றுகிறது. உடனே கிணற்றிலிருந்து நடராஜனுடைய உருவம் மெதுவாகத் தோன்றி லீலாவுக்குத் தைரியம் சொல்லி விட்டு மறைகிறது. அந்தக் காட்சி பார்ப்பதற்கு விசித்திரமாக இருப்பதுடன் நம்மைப் பிரமிக்க வைத்து விடுகிறது.

அந்தமான் கைதி வேஷத்திலே டி. கே. பகவதி தோன்றும்போது ஆயுள் கைதியின் மன வேதனை முகத்தில் தோன்ற நடிக்கிறார். அவரே சீர்திருத்த வாதி நடராஜனாக நடிக்கும்போது ஒரு ஆவேசங்கொண்ட சீர்திருத்த வாதியை நேரிலே பார்த்துப் பழகுவதுபோலவே தோன்றுகிறது.

“அம்மா! ஐம்பத்தைந்து வயதுக் கிழவனுக்கு உங்கள் பெண்ணைக் கலியாணம் செய்து வைத்திருக்கிறீர்களே, நீங்கள் பதினைந்து வயதுப் பெண்ணாக இருந்து என் தந்தை ஐம்பத்தைந்து வயதுக் கிழவனாக இருந்தால் நீங்கள் சம்மதித்திருப்பீர்களா?” என்று தன் தாயைக் கேட்கும்போது அவருடைய நடிப்பு அபாரம்.

கதாநாயகன் பாலுவாக நடிக்கும் டி. கே. ஷண்முகத்தைப் பார்த்தால் “ஒளவைக் கிழவியாக நடித்த ஷண்முகமா இவர்!” என்று ஆச்சரியப்பட வேண்டியிருக்கிறது. இருபது வயது இளைஞராகத் தோன்றி உயர்தரக் காதலனாக நடித்திருக்கிறார்.

கதாநாயகி லீலாவாக நடிக்கும் துரௌபதை 'பளிச்' 'பளிச்' சென்று பேசி நன்றாகப் பாடி இயற்கையாக நடிக்கிறார். பேயாட்டம் ஆடிப் படுக்கையறையிலிருந்து திவான்பகதூரைத் துரத்துவதும் பேயோட்ட வந்த பூசாரியைப் பிரம்படி கொடுத்து ஓட வைப்பதும் பிரமாதம்.



அண்ணனும் தங்கையும்

பூசாரி முனியாண்டியாக நடித்த ஹாஸ்ய நடிகரான சிவதாணு சபையோரைக் குலுங்கக் குலுங்கச் சிரிக்க அடித்துக் கொண்டே இருக்கிறார்.


பூசாரி முனியன்

இந்த நாடகத்திலே நடித்த நடிகர்களுக்குள் திவான் பகதூர் பொன்னம்பலம் பிள்ளையாக நடித்தவருக்கே முதல் ஸ்தானம் கொடுக்க வேண்டும். வேஷமும் கன கச்சிதம். பேச்சும் நடை உடை பாவனைகளும் மிகப் பொருத்தமாயிருக்கின்றன.

டி. கே. எஸ். சகோதரர்கள் 'அந்தமான் கைதி'யைப் போன்ற சமூக சீர்திருத்தக் கதைகளைச் சிறந்த முறையில் நாடகமாக நடிப்பதின் மூலம் தமிழ்நாட்டு அரங்க மேடைக்கே உயர்வையும் புகழையும் அளித்து வருகிறார்கள்.

• • •

“உம்முடைய விமரிசனத்தைப் பார்த்தால் நாடகம் நாலு மணி நேரம் நடக்கும் போலிருக்கிறதே?” என்றார் அந்த நண்பர்.

“அப்படி ஒன்றுமில்லை. நாடகம் ஆறு மணிக்கு ஆரம்பித்து இடைவேளை உட்பட சரியாக ஒன்பது மணிக்கெல்லாம் முடிந்து விடுகிறது. இந்த மூன்று மணி நேரத்துக்குள் ஒரு ஆயுட்காலத்துச் சம்பவங்கள் நடந்து விடுகின்றன” என்றேன்.

“உதவாக்கரை டாக்டர்களைப் பார்த்து மனதையும் கண்ணையும் கெடுத்துக் கொண்டு வருவதை விட இந்த நாடகத்துக்குப் போனால் எவ்வளவோ நல்லது போலிருக்கிறதே. நாளைக்கே போகிறேன். ரொம்ப வந்தனம்” என்று சொன்னார்.

“ஒரு விஷயம் மறந்து விடாதீர்கள். நாடகம் முடிந்தவுடன் மேடையில் நமது தேசியக் கொடியைப் பறக்கவிடுகிறார்கள். அப்பொழுது எழுந்து நின்று தாயின் மணிக் கொடிக்கு மரியாதை செய்து விட்டு வாருங்கள்!” என்றேன்.

மற்ற நாட்டார்களைப் போல் நம் தேசியக் கொடிக்கு மரியாதை செய்யும் வழக்கம் நம்மவர்களுக்கு ஏற்பட இன்னும் எத்தனை காலம் ஆகுமோ தெரியவில்லை.

வாழிய செந்தமிழ்!

வளர்க நாடகக் கலை!

# அலை ஓசை

கல்கி

சந்திரா

இருபத்தெட்டாம் அத்தியாயம்

## கடல் பொங்கிற்று!

ராகவன் அந்த அறையின் வாசற்படி வரையில் சென்று கதவுக்கு வெளியே எட்டிப் பார்த்தான். மச்சுப் படிகளில் சூரியா நிற்கவில்லை என்பதைத் தெரிந்து கொண்டான். பிறகு ஜன்னல் வழியாக வீதியில் எட்டிப் பார்த்தான். சூரியா வீதியில் போய்க் கொண்டிருக்கக் கண்டான்.

திரும்பி வந்து தாரிணியின் முன்னால் நாடக பாத்திரத்தைப் போல் நின்று கொண்டு "தாரிணி! உன்னிடம் தனிமையில் நான் என்ன சொல்ல விரும்பினேன் என்பது உனக்குத் தெரியவில்லையா? உண்மையாகவே என் மனோ நிலையை நீ அறிந்து கொள்ளவில்லையா? அல்லது தெரிந்திருந்தும் தெரியாதது போலப் பாசாங்கு செய்கிறாயா?" என்று கேட்டான்.

"தங்களுடைய மனோநிலை எனக்குத் தெரிந்திருந்ததானால், என்னுடைய மனமும் தங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும் அல்லவா? அப்படியென்றால், பேச்சுக்கு அவசியமில்லையே? சொல்லுவதற்கும் கேட்பதற்கும் ஒன்றும் இராதே!" என்றாள் தாரிணி.

"இல்லை; உன்னுடைய மனதை நான் அறியக் கூடவில்லை. தாரிணி! அப்படி ஒரு காலம் இருந்தது. உன்னுடைய மனதில் ஒரு எண்ணம் தோன்றுவதற்குள்ளே என்னுடைய மனதில் அது பிரதிபலித்தது. அவ்விதமே என் மனமும் உனக்குத் தெரிந்திருந்தது. நான் நினைப்பேன்; அதை நீ சொல்லுவாய். நீ நினைப்பாய்; அந்த க்ஷணமே அதை நான் காரியத்தில் செய்வேன். இப்போது அப்படியில்லை. உன் மனதை நான் அறிய முடியவில்லை. ஏதோ ஒரு மாயத் திரை உன் மனதை மூடிக்கொண்டிருக்கிறது. அது உன் மனதில் உள்ளதை நான் அறிய முடியாமல் தடை செய்கிறது. உனக்கும் எனக்கும் மத்தியில் அந்தத் திரையைத் தொங்க விட்ட சண்டாளப் பாதகன் யார் என்று மட்டும் தெரிந்தால்......?" என்று ராகவன் சீறினான்.

"ஐயா! அந்த மாயத் திரையை வேறு யாரும் தொங்கவிடவில்லை. தாங்களேதான் சிருஷ்டி செய்து கொண்டிருக்கிறீர்கள். வேறு யாரோ என்று எண்ணிக் கோபித்துக் கொண்

வதில் என்ன பயன்? பிரயாணம் கிளம்புவதற்கு முன்னால் எனக்கும் சில காரியங்கள் பாக்கியிருக்கின்றன. தயவு செய்து தாங்கள் சொல்ல விரும்பியதைச் சீக்கிரம் சொல்லி விட்டால் நல்லது."

"சொல்லுகிறேன்; பேஷாகச் சொல்லுகிறேன். சொல்லுவதற்குத்தான் சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தேன். சுற்றி வளைத்து மூக்கைத் தொட நான் விரும்பவில்லை. மனதிலிருப்பதை அப்படியே பட்டவர்த்தனமாய்ச் சொல்லி விடுகிறேன். தாரிணி! நீ இல்லாமல் இனிமேல் ஒரு நிமிஷமும் என்னால் உயிர் வாழ முடியாது. மூன்று மாதத்துக்கு முன்னால் டில்லி ரயில்வே ஸ்டேஷனில் உன்னை நான் பார்த்ததிலிருந்து என்னுடைய மனது என் வசத்தில் இல்லை. தாஜ்மகாலில் உன்னைப் பார்த்து இரண்டு மூன்று நாள் சேர்ந்து வசித்தது முதல் பித்துப் பிடித்தவன் போலாகி விட்டேன். இந்த மூன்று மாதகாலமாக எனக்கு எந்த வேலையிலும் மனம் செல்லவில்லை. ஆபிசிலும் சரியாக வேலை செய்கிறதில்லை. என் பேரில் அளவில்லாத அபிமானம் கொண்ட துரைகூட அடிக்கடி என் பேரில் குற்றம் கூறுகிறார். 'உனக்கு என்ன வந்துவிட்டது?' என்று கேட்கிறார். ஸிம்ளாப் பயணத்தைக் கூட உனக்காகவே நான் நிறுத்திவிட்டேன். நீ டில்லியில் இருக்கும்போது நான் ஸிம்ளாவுக்குப் போய் என்ன சந்தோஷத்தைக் காணப் போகிறேன் என்று எண்ணித்தான் போகவில்லை. ஸிம்ளாவுக்குப் போனால் என்ன? காஷ்மீருக்குப் போனால் என்ன? நீ இல்லாமல் எங்கே போனாலும் எனக்கு எந்த வித சந்தோஷமும் கிட்டப்போவதில்லை. உனக்கு ஞாபகம் இருக்கிறதா, தாரிணி! நாம் கலியாணம் செய்து கொண்டதும் 'ஹனிமூன்' கொண்டாடக் காஷ்மீருக்குப் போவதாகத் திட்டம் போட்டிருந்தோமே, அது ஞாபகம் இருக்கிறதா?..."

"நண்பரே! தங்களை ரொம்பவும் கேட்டுக்கொள்கிறேன். தயவு செய்து அந்தப் பழைய கதைகளை இப்போது சொல்ல வேண்டாம். அதையெல்லாம் ஒரு கனவு என்று எண்ணி மறந்து விடுங்கள்!"

"நீ மறந்து விட்டாய், தாரிணி! அது நன்றாய்த் தெரிகிறது. நீ அதிர்ஷ்டக்காரி; அதனால் மறந்துவிட்டாய். ஆனால் என்னால் மறக்க முடியவில்லை. அந்தப் பழைய நினைவுகள் என் மனதை ஓயாமல் அரித்து எடுத்துக் கொண்டிருக்கின்றன. அந்த நினைவுகள் எனக்கு இன்பத்தை அளிக்கின்றனவா, துன்பத்தை அளிக்கின்றனவா என்றே சொல்ல முடியவில்லை. பம்பாயில் ஒரு நாள் நாம் சௌபாத்தி கடற்கரையில் உலாவிவிட்டு மலபார் குன்றிலுள்ள தொங்கும் தோட்டத்துக்குப் போனோமே, அது உனக்கு நினைவிருக்கிறதா, தாரிணி! அல்லது அதைக் கூட மறந்து விட்டாயா? தோட்டத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு ஒரு கொடி வீட்டின் கீழே கிடந்த பெஞ்சிப் பலகையில் உட்கார்ந்தோம். அந்தக் கொடி வீட்டின்மீது படர்ந்திருந்த கொடிகளிலே பல வர்ண இலைகளும் தளிர்களும் அடர்ந்து தழைத்திருந்தன. அந்த இலைகள், தளிர்கள், மலர்களோடு கலந்து பல வர்ணப் பட்டுப் பூச்சிகள் காணப்பட்டன. அந்தப் பட்டுப் பூச்சிகள் படபடவென்று சிறகுகளை அடித்துக் கொண்டு எழுந்து ஒரு நிமிஷம் பறப்பதும் மறுபடியும் உட்காருவதுமாயிருந்தன. பட்டுப் பூச்சிகளில் ஒன்று உன்னுடைய தோளின்மீது வந்து உட்கார்ந்தது. அதைப் பார்த்த நான், 'தாரிணி! இந்தப் பட்டுப் பூச்சியைப் பார்! உன்னை ஒரு பூங்கொடி என்று எண்ணிக் கொண்டு வந்து உட்கார்ந்திருக்கிறது. ஆனால் அது அவ்வளவு பெரிய தவறு செய்துவிட்டதாகச் சொல்ல மாட்டேன்!' என்றேன். உடனே நீ உன்னுடைய உடம்பைச் சிலிர்த்தாய். பட்டுப் பூச்சி பறந்து போயிற்று. 'பூங்கொடி என்பது ரொம்பப் பொருத்தம். இப்போது நீ உடம்பைச் சிலிர்த்தபோது தென்றற் காற்றில் பூங்கொடி அசைவது போலவே இருந்தது' என்றேன். நீ அதற்கு, 'தென்றற் காற்றோடு போயிற்றோ? புயற்காற்றாயிருந்தால் கொடியின்பாடு ஆபத்துத்தான். கவிஞர்கள் பெண்களைக் 'கொடி' என்று வர்ணிப்பது ஒன்றும் எனக்குப் பிடிப்ப

தில்லே. கொடியைப்போல் அவ்வளவு பலவீனமாக இருந்து விட்டால் இந்த உலகத்தில் பெண்கள் எப்படிச் சுதந்திரமாக வாழ முடியும்?' என்று கேட்டாய். 'பெண்கள் சுதந்திரமாக இருக்க முடியாதுதான். ஆனல் பெண்களுக்குச் சுதந்திரம் எதற்காக? கொடியைத் தாங்குவதற்கு மரம் இருக்கும்போது கொடி எதற்காகத் தனித்து நிற்கவேண்டும்?' என்று நான் சொன்னேன். அதற்கு நீ, 'என்னை வேணுமானல் கொடி என்று சொல் லுங்கள்; செடி என்று வேணுமானு லும் சொல்லுங்கள். ஆனல் உங்களை மரம் என்று சொல்லிக் கொள்ள வேண்டாம்' என்ருய். 'உன்னைப் போன்ற ஒரு கொடியைத் தாங்கும் பாக்கியம் கிடைத்தால் நான் இந்த நிமிஷமே மரமாகிவிடத் தயார். என்ன சொல்கிருய்?' என்றேன் நான். 'ஜாக்கிரதை! அருகில் நெருங்க வேண்டாம். உங்களை மரமாகும்படி சபித்து விடுவேன்!' என்ருய் நீ. 'எங்கே! சபித்து விடு! உன் சக்தியைப் பார்க்கலாம்' என்று நான் கூறினேன். நீ கோபங்கொண்டதாகப் பாசாங்கு செய்து என் முகத்தை உற்று நோக்கினுய். நானும் உன் முகத்தை உற்றுப் பார்த்தேன். அப்படியே சிறிது நேரம் அசையாமல் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டிருந்தோம். நேரமாக ஆக, நம்முடைய முகங்கள் நெருங்கி வந்தன. முகத்தை முகம் பார்ப்பதற்குப் பதிலாகக் கண்களைக் கண்கள் வெகு சமீபத்தில் நின்று உற்றுப் பார்த்தன. கடைசியாக, நீ தோல்வியுற்ருய். சட்டென்று எழுந்து நின்று 'இந்த மரம் பொல்லாத மரமா யிருக்கிறது. நின்ற இடத்தில் நிற்காமல் நெருங்கி நெருங்கி வருகிறது!' என்று சொல்லிவிட்டுக் கல கல வென்று சிரித்தாய். இருவரும் கைகோத்துக் கொண்டு அவ்விடமிருந்து கிளம்பினேம். மலபார் குன்றின் தோட்டத்திலிருந்து சாலையில் இறங்கியபோது அஸ்தமித்து விட்டது. இதோ பம்பாய் நகரின் லட்சக்கணக்கான தீபங்கள் வானத்து நட்சத்திரங்களுடன் போட்டியிட்டுக் கொண்டு ஜொலித்தன. உலகமே இன்பமயமாகத் திகழ்ந்தது. அச்சமயத்தில் பக்கத்திலிருந்த ஒரு மாளிகையிலிருந்து கிராமபோன் கீதம் ஒன்று வந்தது. 'பிரேம நகர் மே பனு ஊங்கி கர்' என்னும் பாட்டு அது. ஸினிமா நடிகர் ஸைகல் பாடியது. 'இந்தப் பாட்டு நமக்காகத்தான் பாடப்பட்டது போலிருக்கிறது. பிரேமை என்னும் நகரத்திலேயே நாமும் நம்முடைய வீட்டைக் கட்டிக் கொள்ளலாம்!' என்றேன் நான். தாரிணி! இதெல்லாம் உனக்கு நினைவிருக்கிறதா? நான் இப்போது சொன்ன பிறகாவது நினைவு வருகிறதா! அல்லது என்னமோ பைத்தியக்காரன் உளறுகிறன் என்று அலட்சியம் செய்து வேறு எதையாவது பற்றி எண்ணிக் கொண்டிருந்தாயா?"

இந்த நெடிய பேச்சைக் குறுக்கிடாமல் கேட்டுக் கொண்டு வந்த தாரிணியின் உள்ளம் கனிந்து போயிற்ருே என்னமோ, தெரியாது. பனிச் சென்று அவளால் பதில் சொல்ல முடியவில்லை. தயங்கித் தடுமாறிக் கூறினுள்:— "நீங்கள் சொல்லுவதையெல்லாம் கவனமாகக் கேட்டு வந்தேன். அவ்வளவும் எனக்கும் நினைவிருக்கிறது. ஒன்றும் மறந்துபோகவில்லை. ஆனல் அப்போது நாம் இருவரும் செய்த தவறு இப்போது எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. **பிரேம நகரம்** என்பதாக உண்மையில் ஒன்று கிடையாது. அது வெறும் மாயா நகரம். கவிகளின் கற்பனைச் சித்திரம். பிரேம நகரம் என்பது உண்மையாக இருந்தாலும் அந்த நகரத்தில் வீடு கட்டிக் கொள்ள இப்போது நான் விரும்பவில்லை. அதற்குப் பதிலாகச் **சேவா நகரத்தில்** வீடுகட்டிக் கொண்டு வாழ விரும்புகிறேன். ராகவன்! நான் பார்த்ததை யெல்லாம் நீங்கள் பார்த்திருந்தால், என்னுடைய அநுபவமெல்லாம் உங்களுக்கும் ஏற்பட்டிருந்தால், என்னைப்போலவே நீங்களும் நினைப்பீர்கள். பிரேமை, காதல் என்னும் பிரமைகளில் மனதைச் செலுத்தமாட்டீர்கள். இந்த உலகத்தில் வாழும் மக்களின் துன்பத்தை ஒரு அணுவளவேனும் நம்மால் குறைக்க முடியுமா என்று என்னைப் போலவே அல்லும் பகலும் சிந்திப்பீர்கள்."

"தாரிணி! இது என்ன பேச்சுப் பேசுகிருய்? உலகத்து மக்களின் துன்

பத்தை உன்னாலும் என்னாலும் குறைத்துவிட முடியுமா? நீயும் நானும் கடவுளைவிடச் சக்தி வாய்ந்தவர்களா? கடவுளுடைய நியதியால் மனிதர்கள் இன்பமோ துன்பமோ அடைகிருர்கள். அவரவர்களுக்கும் தனித்தனியே கடவுள் வழி வகுத்து விட்டிருக்கிருர். அந்தந்த வழியில் அவரவர்களும் போய்த்தானே ஆகவேண்டும்? உலகத்தை நாம் சீர் திருத்திவிட முடியும்,—



உலகத்து மாந்தரின் துன்பத்தைக் குறைத்துவிட முடியும், — இன்பத்தைப் பெருக்கிவிட முடியும் என்று நினைப்பதெல்லாம் எவ்வளவு பெரிய அகம்பாவம்? அந்த மடையன் சூரியாவைப்போல் நீயும் பேசுகிருயே? அவனிடந்தான் கற்றுக் கொண்டாயா?" என்று நிதானத்தை இழந்து படபடப்பாய்ப் பேசினுன் ராகவன்.

ஆனல் தாரிணி நிதானம் இழக்கவில்லை; படபடப்பு அடையவும் இல்லை. "ஐயா! எதற்காக இவ்வளவு படபடப்பாய்ப் பேசுகிறீர்கள்? சூரியாவின் பெயரை இதில் இழுக்க வேண்டியதே யில்லை. அவரை நான் சந்திப்பதற்குப் பல நாளைக்கு முன்பே சில அநுபவங்களைப் பெற்றேன்; சில முடிவுகளுக்கு வந்தேன். கடவுள் சிருஷ்டித்த உலகத்தை அபிவிருத்தி செய்து விடலாம் என்ற அகம்பாவத்தினுலோ, விதியை மாற்றி விடலாம் என்ற அசட்டு நம்பிக்கையினுலோ நான் தொண்டு வாழ்க்கையை மேற்கொள்ளவில்லை. துன்புற்றவர்களுக்குத் தொண்டு செய்வதிலேதான் என் மனம் இன்பத்தை அடைகிறது; நிம்மதியைக் காண்கிறது. வேறுவித வாழ்க்கையில் என் மனம் செல்லவில்லை. அதற்கு நான் என்ன செய்ய முடியும்? கடவுள் அவரவர்களுக்குத் தனித் தனியே வழி வகுத்து விட்டிருக்கிருர் என்று தாங்களே சற்று முன் சொன்னீர்கள். தங்களுக்கு வேறு வழியும் எனக்கு வேறு வழியும் ஆண்டவன் வகுத்திருக்கிருர். அவரவர்களுடைய வழியில்தானே அவரவர்கள் போக வேண்டும்? நம்முடைய வழிகள் வேறு என்பதைத் தங்களை முதன் முதலில் சந்தித்த காலத்தில் நான் தெரிந்து கொள்ளவில்லை. அந்த நாளிலேதான் ஏதோ ஒரு மாயத் திரை என் அறிவை மூடி யிருந்தது. திரை விலகியதும் உண்மையைக் கண்டேன். தயவு செய்து மன்னித்து விடுங்கள். என்னை என் வழியில் போக விடுங்கள்."

"ஒரு நாளும் முடியாது. உன்னை இப்போதுதான் மாயை வந்து மூடியிருக்கிறது. அந்த நாளில் நீ கண்டது தான் உண்மை. உன்னுடைய வழி வேறு, என்னுடைய வழி வேறு என்பதும் தவறு. ஹிந்து தர்மத்திலே புருஷ

னுடைய வழிதான் ஸ்திரீயின் வழி. ஸ்திரீக்குத் தனி வழி கிடையாது.”

“அவ்விதம் பரிபூரணமாய் நம்பித் தங்களைத் தெய்வத்துக்கும் மேலாக மதித்துப் போற்றுகிற ஒரு பெண்ணைத் தாங்கள் மனைவியாகப் பெற்றிருக்கிறீர்கள். அது தங்களுடைய பாக்கியம். ராகவன்! கொஞ்சம் யோசித்துப் பார்த்துச் சொல்லுங்கள். என்னிடம் காதலைப் பற்றிப் பேசும்போது தங்களுக்குச் சீதாவின் நினைவே கிடையாதா? நிர்க்கதியாகத் தங்களையே நம்பி வந்திருக்கும் அந்தப் பேதைப் பெண்மீது உங்களுக்கு இரக்கம் கொஞ்சமும் இல்லையா? அவளுக்குத் துரோகம் செய்ய எப்படி உங்களுக்கு மனம் வருகிறது?”

“ஆ! துரோகத்தைப் பற்றியா பேசுகிறாய்? துரோகம் யாருக்கு யார் செய்தார்கள்?—எனக்கும் சீதாவுக்கும் சேர்த்து நீ துரோகம் செய்தாய், தாரிணி! உன்னைப் பரிபூரணமாக நம்பியிருந்த என்னை நட்டாற்றில் விட்டு விட்டுச் சென்னையிலிருந்து சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டுப் போனாய். தப்பர்த்தத்துக்கு இடமாயிருந்த ஒரு முட்டாள் கடிதத்தையும் விட்டுவிட்டுப் போனாய். அதுவும் வேண்டுமென்று நீ செய்த சூழ்ச்சிதானோ என்னமோ, தெரியாது. அதோடு உன் துரோகம் முடிந்ததா? இல்லை! அப்புறம் பீஹாரிலிருந்து பூகம்பத்தின் பிளவில் நீ விழுந்து மாண்டாய் என்று நான் நம்பும்படியாகக் கடிதம் எழுதப் பண்ணினாய். இம்மாதிரியெல்லாம் நீ செய்த துரோகங்களினாலேதான் நான் சீதாவை மணக்கும்படி நேர்ந்தது......”

“நான் செய்தது துரோகமாகவேயிருக்கட்டும். தக்க காரணத்தோடு நான் அவ்விதம் செய்தேன். ஆனால் சீதாவையும் தாங்கள் மற்றவர்களைப் போல் சாதாரணமாய்க் கலியாணம் செய்துகொண்டுவிடவில்லையே? வேறு ஒரு பெண்ணைப் பார்க்கப்போன இடத்தில் சீதாவைப் பார்த்து......”

“ஆமாம்; இவளைப் பார்த்து மோகித்துக் கலியாணம் செய்து கொண்டு விட்டேன்! அப்படி உன்னிடம் சீதா பெருமை அடித்துக் கொண்டாளாக்கும்! இதிலிருந்து அவளுடைய பட்டிக் காட்டுத்தனத்தை நீயே தெரிந்து கொள்ளலாம். தாரிணி! சில சமயம் சீதாவை நான் வைஸ்ராய் மாளிகைப் பார்ட்டிகளுக்கும் மற்றும் பெரிய உத்தியோகஸ்தர்கள் கொடுக்கும் பார்ட்டிகளுக்கும் அழைத்துப் போகிறேன். அழைத்துப் போய்விட்டு ஒவ்வொரு நிமிஷமும் நரக வேதனையை அநுபவிக்கிறேன். எந்தச் சமயத்தில் அவள் என்ன தவறு செய்வாளோ?



பிளேட்டைக் கீழே போட்டுஉடைத்து விடுவாளோ,— மேலே டீயைக் கொட்டிக் கொண்டு விடுவாளோ,— யாரிடம் என்ன உளறிவிடுவாளோ என்று ஒவ்வொரு நிமிஷமும் எனக்குக் கதிகலக்கமாகவே யிருக்கும். அப்போ தெல்லாம் உன்னை நினைத்துக் கொள் வேன். நீ மட்டும் என்னோடு புது டில்லிப் பார்ட்டிகளுக்கு வந்தால்...?''

"நீங்கள் நினைப்பது முற்றும் தவறு. பார்ட்டிகளில் நடந்து கொள்வதில் சீதாவை விட நான் மோசமாயிருப் பேன். நாகரிக நடை உடை பாவனை ஒன்றுமே எனக்குத் தெரியாது..."

"உன் விஷயம் வேறு, தாரிணி! பார்ட்டிகளில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை ஒரே நாளில் உனக்கு நான் கற்றுக் கொடுத்து விடு வேன். அப்படியே நீ ஏதாவது தவறு செய்தாலும் அதனால் எனக்கு அவ மானம் ஒன்றும் ஏற்படாது. சீதா ஏதேனும் தவறு செய்தால் அதைப் பார்த்து நாலு பேர் சிரிப்பார்கள். நீ செய்தால் அதுதான் புது நாகரிகம் என்று நினைத்துக் கொள்வார்கள். காதில் அணிந்து கொள்ளும் லோலக்கை நீ மூக்கில் தொங்கவிட்டுக் கொண்டு ஒரு நாள் வந்தால் மறு நாள் எல்லாரும் அப்படியே செய்வார்கள். நீ புடவைத் தலைப்பில் டீயைக் கொட் டிக் கொண்டால், அதைப் பார்த்து அவ்வளவு பேரும் டீயைக் கொட்டிக் கொள்வார்கள். இதெல்லாம் அவரவர் களுக்கு இறைவன் அளித்த பாக்கியம். ஒருவரைப் பார்த்து ஒருவர்......"

"அதைத்தான் நானும் சொல் கிறேன். சீதா தாங்கள் இழுத்த இழுப்புக்கு வருகிறாள். பார்ட்டி களுக்கும் வருகிறாள். நானோ பார்ட்டி களுக்கே வரமாட்டேன். இத்தனைக் குப் பிறகும் என்னுடைய இயல்பை நீங்கள் அறிந்து கொள்ளவில்லை. ஆனாலும் நாம் சேர்ந்து வாழ முடியும் என்று சொல்கிறீர்கள்."

"தாரிணி! அப்படி நீ பிடிவாதம் பிடித்தால் நான் பின் வாங்கி விடு வேன் என்று நினையாதே. 'இந்த உத்தியோகத்தை விட்டு விடுங்கள்; ஏதோ ஒரு ஆசிரமத்துக்குப் போவோம் வாருங்கள்!' என்று சொல்லு. அடுத்த நிமிஷம் விட்டு விட்டு வரத் தயாராயிருக்கிறேன். என்னுடைய காதலின் ஆழத்தை நீ இன்னும் அறிந்து கொள்ளவில்லை. உனக்காக எப்படிப்பட்ட தியாகத்தை யும் செய்ய நான் தயார், தாரிணி! எனக்கு நீ என்ன சோதனை வேணு மானாலும் வைத்துப் பார்!"

"தங்களுக்கு நான் ஏற்படுத்தக் கூடிய சோதனை ஒன்றே ஒன்றுதான். ராகவன்! என்பேரில் தங்களுக்கு அபி மானம் உண்டு என்பதில் லவலேசமும் உண்மையிருந்தால், தங்கள் மனைவி சீதாவை அன்புடன் ஆதரித்துக் காப் பாற்றுங்கள். அந்தப் பேதைப் பெண் ணைக் கை விடாதீர்கள்."

"அவளைக் கை விடுவதாக யார் சொன்னார்கள்? அந்த எண்ணம் எனக்கு லவலேசமும் இல்லை. அவளும் இருந்து விட்டுப் போகட்டும்."

"வைதிக காரியங்களுக்குத் தாலி கட்டிய மனைவி இருந்து விட்டுப் போகட்டும்; நான் ஆசை நாயகியா யிருக்கட்டும் என்கிறீர்களாக்கும்!"

"சிச்சீ! என்ன வார்த்தை சொன் னாய்? அவ்வளவு கீழ் மகன் நான் அல்ல, தாரிணி! உன்னையும் நான் கலியாணம் செய்து கொள்ளத் தயாரா யிருக்கிறேன். அதனால் என்ன ஏச்சு வந்தாலும், என்ன பேச்சுப் புறப்பட்டாலும், எவ்வளவு அவ மானத்துக்கு நான் உட்பட வேண்டி யிருந்தாலும் பாதகமில்லை."

"என்ன? என்ன? தயவு செய்து இன்னொரு தடவை சொல்லுங்கள்!" என்று அடங்கா வியப்புடன் கேட் டாள் தாரிணி.

"உன்னையும் அக்கினி சாட்சியாகக் கலியாணம் செய்து கொள்வதாகச் சொல்கிறேன். இந்த நிமிஷம் நீ உன் னுடைய சம்மதத்தைச் சொல்ல வேண்டியதுதான்; அடுத்த நிமிஷத் தில் கலியாணத்துக்கு ஏற்பாடு செய்து விடுகிறேன்" என்றான் ராகவன்.

"ராகவன்! இந்த விஷயத்தில் உங்க ளுடைய முதல் மனைவியின் அபிப்பிரா யம் எப்படி யிருக்கும் என்று யோசித் தீர்களா?" என்றாள் தாரிணி. அவளு டைய பேச்சில் இப்போது கடுமை

தொனித்தது. போகப் போக அந்தக் கடுந் தொனி அதிகமாயிற்று.

"அதைப்பற்றி எனக்குக் கவலை யில்லை. ஒருவருக்காக இன்னொருவர் தன்னுடைய வாழ்க்கை இன்பத்தையே பறி கொடுத்துவிட முடியுமா? —மேலும் அவளை நான் அடியோடு வேண்டாம் என்று சொல்லிவிட வில்லையே? அவளும் இருந்து விட்டுப் போகட்டும்!" என்றான் ராகவன்.

"ஐயோ! பாவம்! ரொம்பப் பெரிய மனது செய்து சொல்கிறீர்கள். இன்னொரு விதமாக யோசனை செய்து பாருங்கள். உங்களைப் போல் சீதா இன்னொரு புருஷனைக் காதலித்துக் கலியாணம் செய்து கொள்ள விரும்பினால், நீங்கள் சம்மதிப்பீர்களா?"

"சீச்சீ! என்ன வார்த்தை சொல்கிறாய், தாரிணி! அது ஹிந்து தர்மத்துக்கு விரோதமான காரியம்."

"புருஷர்களை மட்டும் ஹிந்து தர்மம் இஷ்டப்படி செய்யலாம் என்று தண்ணீர் தெளித்து விட்டிருக்கிறதா?"

"ஆமாம்; நீயே யோசித்துப் பாரேன்! ஹிந்து தர்மம் புருஷர்கள் பலதார மணம் செய்ய இடம் கொடுத்திருக்கவில்லையா? மகாவிஷ்ணுவுக்கும் பரமசிவனுக்கும் சுப்பிரமணியருக்கும் இரண்டு இரண்டு மனைவிகள் உண்டல்லவா? கிருஷ்ண பகவானோ எட்டுப் பேரை மணந்து கொண்டார்......"

"ராகவன்! அவர்கள் தெய்வங்கள்; என்ன வேணுமானாலும் செய்யலாம். கிருஷ்ண பகவான் எட்டுப் பேரை மணந்தார் என்பது உண்மைதான். ஆனால் அதே கிருஷ்ணன் துரியோதனனுக்கு முன்னால் விசுவ ரூபத்தைக் காட்டினார்; சக்ராயுதத்தினால் சூரியனையே மறைத்தார். இதெல்லாம் உங்களால் முடியுமா? இராமாவதாரத்தைப் பாருங்கள். இராமாவதாரத்தில் பகவான் மனிதர்களைப் போல நடந்து காட்டினார். இராமர் சீதை ஒருத்தியைத்தானே மணந்தார்? தங்களுடைய பெயர் ராகவன். தங்கள் மனைவியின் பெயர் சீதா. இராமர் சீதையைக் காப்பாற்றியது போல் உங்கள் சீதாவை நீங்கள் காப்பாற்றுங்கள். இன்னும் ஒரே ஒரு விஷயம் சொல்லுகிறேன். உங்கள் மனைவி எப்பேர்ப்பட்டவள் என்பதை நீங்கள் இன்னும் அறிந்து கொள்ளவில்லை. உலகமெல்லாம் தேடினாலும் அவளைப் போன்ற ஒரு பெண் கிடைப்பது துர்லபம். உங்களிடம் அவளுக்குள்ள அன்பு இமயமலையைக் காட்டிலும் பெரியது. சப்த சமுத்திரங்களையும்விட விசாலமானது. அவளை அன்புடன் பேணி ஆதரியுங்கள். அதுதான் உங்களுடைய வாழ்க்கை தர்மம்; உங்களுக்கு நன்மை தருவதும் அதுதான்."

"இந்தத் தர்மோபதேசமெல்லாம் எனக்கு வேண்டாம். தாரிணி! ஒன்று சொல்கிறேன், கேள்! சீதாவை விவாகரத்து செய்து அவளுக்கு இஷ்டமிருந்தால் வேறு யாரையாவது கலியாணம் செய்து கொள்ளட்டும் என்று விட்டு விடுகிறேன். அப்போது நீ என்னை மணக்கச் சம்மதிப்பாயா?"

"சீதா உங்களை விட்டுப் போக மாட்டாள், உங்கள் காலடியிலேயே விழுந்து கிடப்பாள் என்ற தைரியத்தினால் இப்படிச் சொல்கிறீர்கள். சீதா விஷயம் இருக்கட்டும். உங்கள் தாயாரிடம் ஒரு சமயம் நீங்கள் பயபக்தியோடு இருந்தீர்கள். அவர் தங்களுடைய காரியத்தைப் பற்றி என்ன நினைப்பார் என்று யோசித்தீர்களா?"

"என் தாயார் தனக்குப் பணிவுள்ள சாதுவான நாட்டுப் பெண் வேண்டும் என்று சொன்னாள். அத்தகைய நாட்டுப் பெண் அவளுக்குக் கிடைத்துவிட்டாள். இன்னும் என்ன அவளுக்கு வேண்டும்? என் தாயாரிடம் எனக்கும் பக்தி உண்டுதான். அதற்காக அவள் என்னை எப்போதும் அடிமையாக்கி வைத்திருக்க முடியாது. என்னுடைய வாழ்க்கையை அடியோடு பாழாக்க அவளுக்கு உரிமை கிடையாது. தாரிணி! கடைசியாக, நான் ஒன்று சொல்கிறேன், அதைக்கேள். நாளைக்கு நீ லாகூருக்குப் புறப்படுவதை நிறுத்திவிடு. நம்முடைய விஷயத்தைப் பற்றி இன்னும் நன்றாய் யோசித்து முடிவு செய். பிரயாணம் கிளம்புவதாயிருந்தால் நாம் இருவரும் கிளம்பலாம். உன்னை நான் காஷ்மீருக்கும் டேராடூனுக்கும் டார்ஜிலிங்குக்கும் உதகமண்டலத்துக்கும் அழைத்துப் போகிறேன். அப்புறம் லண்டனுக்கும்

பாரிஸுக்கும் வியன்னாவுக்கும் நேபிள்ஸுக்கும் அழைத்துப் போகிறேன். ஐரோப்பாவைச் சுற்றிப் பார்த்த பிறகு அமெரிக்காவுக்கும் போவோம். ஸான்பிரான்ஸிஸ்கோ, நியூயார்க், வாஷிங்டன், லாஸ் ஏஞ்செலேஸ் முதலிய இடங்களுக்கெல்லாம் போகலாம். இவ்வளவு பிரயாணமும் என்னுடைய உத்தியோக தோரணையிலேயே நான் ஏற்படுத்திக் கொள்வேன். சர்க்காருடைய செலவில் எவ்வளவோ வசதியாகப் போய்விட்டு வரலாம். என்ன சொல்கிறாய், தாரிணி!"

"ஆரம்பத்தில் நான் சொன்னதைத் தான் திரும்பச் சொல்கிறேன். தங்களுடைய வாழ்க்கை இலட்சியம் வேறு; என்னுடைய வாழ்க்கை இலட்சியம் வேறு. ஒருநாளும் நம்முடைய இலட்சியங்கள் ஒன்று சேரமுடியாது. நீங்கள் குறிப்பிட்ட இடங்களுக்கெல்லாம் தாங்கள் சீதாவை அழைத்துப் போங்கள். அதுதான் நியாயம்; அதுதான் உங்களுக்கு க்ஷேமம்."

ராகவன் சிறிது நேரம் திகைப்புடன் தாரிணியைப் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்தவனைப்போல் ஒரு கோபச் சிரிப்புச் சிரித்தான்.

"தாரிணி! நீ ஏன் இப்படிப் பேசுகிறாய் என்பது எனக்குத் தெரியும். யாருடைய மோகவலையிலே சிக்கி என்னை நீ நிராகரிக்கிறாய் என்பதையும் அறிவேன். அந்த ராஸ்கல் சூரியாவின் வேலைதான் இவ்வளவும். எனக்கு ரிவால்வர் லைசென்ஸ் சில நாளைக்கு முன் கிடைத்திருக்கிறது..."

"ராகவன்! வீண் அவதூறு பேசி உங்கள் நாவை அசுத்தப்படுத்திக் கொள்ளவேண்டாம். என்னைப் பயமுறுத்தவும் முயல வேண்டாம். பீகார் பூகம்பத்தைப் பார்த்த பிறகு எனக்குச் சாவு என்றால் பயமே கிடையாது."

"மறுபடியும் நான் சொன்னதை நீ தவறாக எடுத்துக் கொண்டாய். உன்னைச் சுட்டுக் கொல்லப் போவதாக நான் சொல்லவில்லை. என்னை நானே சுட்டுக் கொண்டு சாகப்போவதாகச் சொல்ல எண்ணினேன்."

"என்னுடைய சாவைப் பற்றியும் எனக்குக் கவலையில்லை; மற்றவர்களுடைய சாவைப் பற்றியும் நான் கவலைப்படப்போவதில்லை. பகவத்கீதை என்ன சொல்கிறது? உடம்பைத்தான் கொல்லலாமே தவிர ஆத்மாவைக் கொல்ல முடியாது. எப்பேர்ப்பட்ட வஜ்ராயுதத்தினாலும் முடியாது."

"தாரிணி! உன்னை இப்போதுதான் எனக்குத் தெரிகிறது. நீ பெண் அல்ல; ராட்சஸி. உன்னுடைய அழகு சூர்ப்பணகையின் அழகைப் போன்றது......இருக்கட்டும், பார்த்துக்கொள்கிறேன். நீயும் சூரியாவும் நாளைக்கு ரயில் ஏறிப் போவதைப் பார்க்கிறேன்!" என்று கர்விவிட்டு ராகவன் வெளியேறினான்.

அவன் அப்பால் போனதும் தாரிணியின் கண்களில் அதுகாறும் அடங்கிக் குமுறிக்கொண்டிருந்த கண்ணீர்க் கடல் பொங்கிப் பெருகலாயிற்று.



# ஜனாதிபதி ட்ரூமன்

அமெரிக்க ஜனாதிபதித் தேர்தலைப் பற்றி ஒரு தமாஷ் உண்டு.

"அடுத்த ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்கும் எலெக்ஷன் முஸ்தீபு எப்போதிருந்து ஆரம்பமாகும்?" என்று ஒருவன் கேட்டானாம்.

"இது தெரியாதா, உனக்கு? ஒரு ஜனாதிபதியைத் தேர்ந்தெடுத்த மறு நாளிலிருந்தே அடுத்த ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்கும் எலெக்ஷன் முஸ்தீபு ஆரம்பமாகிவிடும்!" என்றானாம் மற்றவன்.

இது முன்பெல்லாம் வேடிக்கையாகவோ தமாஷாகவோ இருக்கலாம். ஆனால், இந்த வருஷம் என்னவோ அது முற்றிலும் உண்மை. ட்ரூமன் 1943-ம் வருஷம் முதல் தடவையாக ஜனாதிபதியானதிலிருந்தே அமெரிக்காவில் தேர்தல் முஸ்தீபு ரொம்பத் தடபுடலாக நடந்து வந்தது.

இந்தத் தடவை எலெக்ஷனில் போட்டியிட்ட இரு அபேட்சகர்களுக்கும் தலைக்கு ஏறக்குறைய இரண்டு கோடி டாலர் பணமாவது செலவாகியிருக்குமாம். இதுவரை அமெரிக்கத் தேர்தலில் போட்டியிடும் அபேட்சகர்கள் மக்களிடம் நேரடியாகப் போய், 'எனக்கு ஓட்டுப்போடு!' 'எனக்கு ஓட்டுப்போடு!' என்று கேட்டதே இல்லையாம். அவர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களோ அந்தக் கட்சிக்காரர்களே அவர்களுக்காகப் பிரசாரம் செய்வார்களாம். ஆனால் இந்தத் தடவை அந்த சம்பிரதாயமெல்லாம் மறைந்து விட்டது. ட்ரூமனும் அவரை எதிர்த்த ட்யூவேயும் நேரடியாகப் பல இடங்களுக்கும் போய் நூற்றுக்கணக்கான கூட்டங்களில் பேசித் தங்களுக்கே ஓட்டளிக்கும்படியாக வாக்காளர்களைக் கேட்டுக் கொண்டார்களாம்.

போட்டி ரொம்பக் கடுமையாக இருந்தது. ஆனால் ஒன்று மாத்திரம் நிச்சயம் என்று எல்லோரும் திட்டமாக முடிவு கட்டி விட்டார்கள். அதாவது, ட்ரூமன் தோற்றுப் போவது நிச்சயத்திலும் நிச்சயம் என்பதேயாகும்.

"ட்ரூமனே! வீண் ஆசை எதற்கு?" என்றது ஒரு அமெரிக்கப் பத்திரிகை.

"தோல்வி நிச்சயம்!" என்று எச்சரித்தது மற்றொரு அமெரிக்கப் பத்திரிகை.

"நீராவது, ட்யூவேயை எதிர்த்து ஜெயிப்பதாவது!" என்று கேலி செய்தது அமெரிக்க ரேடியோ.

ஒரே ஒரு மனிதருக்கு மாத்திரம் ட்ரூமன் நிச்சயமாக ஜயித்து விடுவார் என்பதில் அளவு கடந்த நம்பிக்கை இருந்துவந்தது.

அந்த ஒரே ஒரு மனிதர் ஸ்ரீமான் ட்ரூமனே யாகும்.

• • •

ட்ரூமன் முதல் தடவையாக ஜனாதிபதிப் பதவிக்கு வந்த சமயம் மிகவும் நெருக்கடியான சமயம்.

இரண்டாவது மகாயுத்தம் இன்னும் முடிவடையவில்லை. நேச வல்லரசுக



"அமெரிக்க மக்களே, என்னைத் தேர்ந்தெடுத்த உங்களுக்கு என் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்."

னுடைய படைகள் மேற்கு அரங்கத்தில் ஜெர்மனியுடன் கடும்போர் நிகழ்த்திக் கொண்டிருந்தன. கிழக்கே ஜப்பானுடைய உபத்திரவம் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு வந்தது. பொதுவாகச் சொல் லப்போனால் யுத்தத்தில் மிகவும் முக்கிய மான கட்டம் இனிமேல்தான். ஒவ்வொரு ராணுவ நடவடிக்கையையும் ரொம்ப ஜாக்கிரதையாகவும் நிதானமாகவும் செய்ய வேண்டும். இந்த முக்கியமான சமயத்தில் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் திடீரென்று காலமாகிவிட்டார்.

அமெரிக்க அரசியல் சட்டப்படி ஒரு ஜனாதிபதி தம்முடைய பதவிக்காலம் முடி வதற்குள் காலமாகி விட்டால், உதவி ஜனாதிபதியே ஜனாதிபதியாக நியமிக்கப் படுவது வழக்கம். அதன்படி வைஸ் பிரஸிடெண்ட் ட்ரூமன் அமெரிக்கப் பிரஸி டெண்டானார்.

முப்பத்து நான்கு வயதுவரை யாருக் கும் தெரியாமல் ஒரு குடியானவனாகக் காலங் கழித்து வந்த ட்ரூமன், உலக மகா வல்லரசுகளில் ஒன்றாக விளங்கும் அமெ ரிக்காவுக்கு ஜனாதிபதியாகி விட்டார்.

ட்ரூமன் ஜனாதிபதியானவுடன் தமக்கு ஏற்பட்டிருக்கும் பெரும் பொறுப்பைக் கண்டு பயந்துவிடவில்லை. அவர் ஜெர் மனியை முறியடித்தார். ஜப்பான் மீது அணுகுண்டை வீசி அதைப் பணிய வைத்தார்.

ட்ரூமன் பதவிக்கு வந்தபோது, "யூ. ட்ரூமனா? அவருக்கு என்ன தெரியும்? இனி அமெரிக்காவுக்கு என்ன கேடு வரப் போகி றதோ?" என்று பலரும் சந்தேகப் பட் டார்கள்; பயப்பட்டார்கள். அந்தச் சந் தேகமும் பயமும் வீண் என்பதை உலகத் துக்கு எடுத்துக்காட்டி விட்டார் ட்ரூமன்.

## இரண்டும் ஒன்றுதான்!

●

ஒரு பிரிட்டிஷ் பார்லிமெண்டு அங்கத் தினருக்கு அவருடைய தொகுதியிலுள்ள ஒரு வாக்காளர் கீழ்க்கண்ட கடிதம் எழுதினார்:

"என்னுடைய தம்பி நாளை லண்ட னுக்கு வருகிறான். அவனுக்குக் காமன்ஸ் சபையைப் பார்க்க வேண்டுமென்று ரொம்ப ஆசையாக இருக்கிறதாம். காமன்ஸ் சபை நடந்து கொண்டிருக்கும் போது, தயவு செய்து அவனை ஒரு தடவை அங்கே அழைத்துக் கொண்டு போய்க் காட்டவும்.

பின் குறிப்பு:—ஒரு வேளை இது உங்க ளுக்கு மிகவும் சிரமமாயிருக்கும் பட்சத் தில், அவனை மிருகக் காட்சிச் சாலைக்கு அழைத்துக் கொண்டு போய்க் காட் டினால் போதும்!"

ட்ரூமன் ஏழை குடும்பத்தில் பிறந் தவர். அவருடைய பெற்றோர்கள் குடி யானவர்கள். சிறுவயதில் ட்ரூமன் தம் முடைய பெற்றோர்களுக்கு உதவியாகத் தோட்டத்துறவு வேலைகளைப் பார்த்து வந்தார். பிறகு பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படித்தார். பதினேழாவது வய தில் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேறினார். மேலே படிக்க அவர் மிகவும் ஆசைப்பட்டார். ஆனால் அதற்குப் பணம் இல்லை. அவருடைய தந்தை மிக்க வயோதிகராகி விட்டார். குடும் பத்தைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு அவருடைய தலையில் விழுந் தது. ஆகவே, வேலைக்காக அங்குமிங்கும் அலைந்து கஷ்டப்பட்டார். கடைசியில் ஒரு காரியாலயத்தில் பியூன் வேலை கிடைத் தது. கொஞ்ச காலத்துக்குப் பிறகு அதை விட்டுவிட்டு ஒரு பத்திரிகை ஆபீ ஸில் பேப்பர் மடித்துக் கொடுத்துக் கொண்டிருந்தார். பிறகு ஒரு பாங்கியில் குமாஸ்தாவாக இருந்தார். பிறகு ராணு வத்தில் சேர்ந்து, முதலாவது மகாயுத்தத் தில் சண்டை போட்டார். பிறகு ஒரு ஜவுளிக்கடை வைத்தார். ஜவுளிக்கடை யில் ஏராளமான நஷ்டம் ஏற்பட்டு விட்டது.

1934-ம் வருஷந்தான் அவருடைய அர சியல் வாழ்க்கை ஆரம்பமாகியது. அந்த வருஷம் அவர் அமெரிக்க செனேட் சபை அங்கத்தினராகத் தேர்ந் தெடுக்கப் பட்டார்.

பிரஸிடெண்ட் ட்ரூமனிடம் உள்ள ஒரு முக்கிய சிறப்பான குணம் நேர்மை- அந்தரங்கசுத்தி. ஊழலுக்கும் அவருக்கும் வெகு தூரம்.

1940-ம் வருஷம் மகாயுத்தம் வெகு கடுமையாக நடந்து கொண்டிருந்த போது, தற்காப்புக்காக அமெரிக்கா கோடிக் கணக்கான டாலர் பணத்தைச் செலவு செய்து ஆயுதங்களையும் விமா னங்களையும் கப்பல்களையும் உற்பத்தி செய்து கொண்டிருந்தது. ஆனால் அந் தத் தற்காப்பு இலாக்காவை நிர்வகித்து வந்த அதிகாரிகள் பணத்தைக் கண்டபடி செலவு செய்து ஊழலுக்கும் கெட்ட பெயருக்கும் உள்ளானார்கள். அதை விசாரித்து நிர்வாகத்தை ஒழுங்காக நடத்துவதற்காக ட்ரூமனுடைய தலைமை யில் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. அந்தக் கமிட்டி ஊழலை ஒழித்துக் கோடிக் கணக்கான டாலர் பணத்தை மீத்து வைத்தது. இதன் மூலம் அமெரிக்க மக்களுக்கு ட்ரூமனிடம் மரியாதை உண்டாயிற்று.

இரண்டாவது மகா யுத்தம் ஆரம்ப மானதும் ட்ரூமன் மீண்டும் ராணுவத்

தில் சேர்ந்து தொண்டாற்றப் போனார். ஆனால், அப்போது அவருக்கு வயது ஐம்பத்தைந்துக்கு மேலாகிவிட்டது. தற்போது அவருக்குக் கீழ் வெளிநாட்டு மந்திரியாக இருக்கும் ஜார்ஜ் மார்ஷல் அப்போது அமெரிக்க ராணுவ தளபதியாக இருந்தார். அவர் ட்ருமனைப் பார்த்து, "உமக்கு வயது அதிகமாகி விட்டது. நீர் செனேட் சபையில் இருக்கத்தான் லாயக்கு!" என்று சொல்லி அவரை அனுப்பி வைத்து விட்டார்.

ட்ருமன் வீட்டுக்கு வந்து, தேசத்துக்கு மிகவும் நெருக்கடியான அந்தச் சமயத்தில் என்ன தொண்டாற்றலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தபோது, வாசலில் மோட்டார் சத்தம் கேட்டது. ஜனாதிபதி ரூஸ்வெல்ட் உள்ளே வந்தார். ட்ருமன் அவரைப் பார்த்து, "எனக்கு ஏதாவது ஒரு வேலை வேண்டும். நான் ராணுவத்துக்குப் போனேன். லாயக்கு இல்லை என்று என்னை அனுப்பி வைத்துவிட்டார்கள். நீங்களாவது ஒரு வேலை கொடுங்களேன்!" என்றார்.

"ஆஹா, கொடுக்கிறேன். ஆனால் நீர் பார்க்கக்கூடிய வேலை அமெரிக்க ஜனாதிபதி வேலை ஒன்றுதான். ஆனால், சில காரணங்களை உத்தேசித்து, அதை இன்னும் நான்கு வருஷம் நானே பார்ப்பதென்று முடிவு செய்திருக்கிறேன். நீர் ஜனாதிபதியாக இல்லாவிட்டாலும் உதவி ஜனாதிபதியாகவாவது இரும்" என்றார்.

1943-ம் வருஷம் அமெரிக்க ஜனாதிபதித் தேர்தல் நடந்தது. ரூஸ்வெல்ட் ஜனாதிபதியாகவும், ட்ருமன் உதவி ஜனாதிபதியாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

ட்ருமனுக்கு ஒரே ஒரு மகள் இருக்கிறாள்.

மனைவியிடம் அவருக்கு அளவு கடந்த நம்பிக்கையும் அன்பும் உண்டு. "நான் என் மனைவிக்குக் காட்டாமல் எதையும் எழுதுவதில்லை, பேசுவதில்லை" என்று அவர் சொல்வது வழக்கம். இதிலிருந்து அவர் மனைவிக்குப் பயந்த ஆசாமிபோலிருக்கிறது என்று நினைக்கத் தோன்றலாம். உண்மை அப்படியல்ல. இதற்கு ட்ருமன் சொல்லும் காரணமாவது: "எனக்கு எவ்வளவோ வேலை இருக்கிறது. ஆகையால் எங்கேயாவது ஒரு தப்புத் தவறு நிகழலாம். நம்முடைய நம்பிக்கைக் குரியவர்களில் யாராவது ஒருவர் அதை யெல்லாம் பார்ப்பது நல்லதுதானே?"

ட்ருமனுக்கு இப்போது வயது அறுபத்து நாலு ஆகிறது.

அடுத்த நான்கு வருடங்களில் உலகத்தின் தலைவிதியை நிர்ணயிக்கக்கூடிய பெரும் பொறுப்பு அவரிடம் இருக்கிறது.




# வாத்தியார் ஐயா

ஜி. நாராயணசாமி

"ஏழாம் வாய்ப்பாடு சொல்லுடா, கோபு!" என்றார் வேம்பு ஐயர். கோபு தமாஷாகத் துணியினால் எலி ஒன்று செய்து பக்கத்திலிருந்தவனிடம் விளையாடிக்கொண்டிருந்தான். 'பூஜை வேளையில் கரடி புகுந்தாற்போல் இருந்தது' அவனுக்கு. ஆகவே விளையாட்டு உலகத்திலிருந்து வாய்ப்பாடு உலகத்துக்கு வர அவனுக்கு இரண்டு நிமிஷம் பிடித்தது.

"ஏண்டா பழி, என்ன பண்ணிக்கிட்டிருக்கே?" என்று சொல்லிக் கொண்டே நாற்காலியிலிருந்து எழுந்து வந்தார் வேம்பு ஐயர். வேறு இடத்தில் கவனம் செலுத்திக் கொண்டிருந்த சிறுவர்கள் வேம்பு ஐயரையே நோக்கினார்கள்.

வேம்பு ஐயர் நான்காவது வகுப்பிற்கு உபாத்தியாயர். க்ஷவரம் செய்யாத முகமும், சப்பை மூக்கும், நீண்ட தாடையும், குட்டையான உருவமும்—இவைகளோடு பல முறை கிழிந்து தைக்கப்பட்ட சட்டையையும், பொத்தானில்லாத கோட்டையும், கப்பிக் கறை ஏறிய வேஷ்டியையும் சேர்த்து நெற்றியில் பட்டையாய் விபூதியை இழுத்தால்—இதோ, வேம்பு ஐயர்!

வேம்பு ஐயர் பழைய உபாத்தியாயர் ரகத்தைச் சேர்ந்தவர். அவர் இந்த வேலைக்கு வந்து முப்பது வருஷங்களாகின்றன. இதுவரை அவர் எவ்வளவோ ரகமான மாணவர்களையும், உபாத்தியாயர்களையும், பெற்றோர்களையும் கண்டிருக்கிறார்; அவர்களோடு பழகியுமிருக்கிறார். ஆனால் வருஷா வருஷம் பையன்களுக்கு ஒரு வகுப்பிலிருந்து மேல் வகுப்புக்கு 'ப்ரமோஷன்' கிடைப்பதுபோல் அவருக்கு மட்டும் கிடைப்பதில்லை. இருபது ரூபாயில் ஆரம்பித்த சம்பளம் ஆமை ஓட்டத்தில் வருஷத்திற்கு ஒரு ரூபாய் வீதம் உயர்ந்து முப்பது ரூபாயோடு இப்போது 'பிரேக்' போட்டு நின்றுவிட்டது.

* * *

இரண்டு வருஷங்களுக்கு முன், பையன் நாலாவது பாரத்திற்குப் பாஸாய் விடுவான் என நினைத்திருந்த வேம்புவின் தகப்பனார், 'பனால்' என்று கேட்டதும் 'படார்' என்று முதுகில் நாலு அறை வைத்து, "போடா! படிப்புக்கும், உனக்கும் லாயக்கில்லை; 'ஹையர் கிரேட் டிரெயினிங்'குக்குப் போ!" என்று சொல்லி விட்டார்.

'டிரெயினிங்' முடிந்ததும், வேம்புவை மகிழங்குடி சர்க்கார் பாடசாலையில் நாலாவது வகுப்பிற்கு உபாத்தியாயராகப் போட்டிருக்கிறார்களென்றும், சம்பளம் இருபது ரூபாய் என்றும் கேள்விப்பட்ட வேம்புவின் தாயாருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியைச் சொல்லி முடியாது. "எங்கள் வேம்பு

வாத்தியாராகிவிட்டான்!" என்று அந்தக் கிராமம் பூராவும் அவன் பறையடித்து விட்டான்.

மகிழங்குடி பாடசாலையில் ஐந்தாவது வகுப்பு வரை உண்டு; இலவசப் படிப்பு தான். ஐந்து வகுப்பு உபாத்தியாயர்களும் ஒன்றாய் 'டிரெயினிங்' படித்தவர்கள். அந்தப் பள்ளிக்கூடத்தில் மொத்தம் இரு நூறு பேர் படிப்பதாக ரிஜிஸ்டரில் இருந்தாலும், ஒரு நாளைக்கு நூறு பேர் வருவது துர்லபம். ஆகையால் உபாத்தியாயர்கள் தமாஷாகப் பேசிக் கொண்டிருக்கவும், வம்புக் கதைகள் அளக்கவும் சௌகரியமாயிருந்தது.

இப்படி வருஷத்தின் முன்பகுதி நாட்கள் குஷியாய்ச் சென்று கொண்டிருக்கும். இருந்தாற்போலிருந்து ஒரு நாளைக்கு இன்ஸ்பெக்டர் வருகிறதாக 'சர்க்குலர்' வரும். உடனே 'சொரேர்' என்று ஏறும் எல்லோருக்கும். திடீரென்று அவசர அவசரமாகக் கிராமத்திலிருக்கும் பையன்களைத் திரட்ட ஆரம்பிப்பார்கள். இன்ஸ்பெக்டர் வந்த அன்று பார்த்தால் வகுப்பில் உட்காரக்கூட இடமில்லாமல் பையன்களிருப்பார்கள்!

இந்த விஷயங்கள் முப்பது வருஷ அனுபவசாலியான வேம்பு ஐயருக்குப் புதிதல்ல. காலையில் ஐந்து மணிக்கெல்லாம் அவர் எழுந்து விடுவார். உடனே பக்கத்தில் குறட்டை விடும் தன் பையன்கள் இருவரையும் இரண்டு தட்டுத் தட்டிவிடுவார். வாண்டுகள் இரண்டும் எழுந்ததும் தங்களுக்குத் தெரிந்த பாடத்தை உரத்துக் கத்த ஆரம்பித்துவிடும். இந்தச் சத்தத்தைக் கேட்டதும், அடுக்களையைக் கழுவிக் கொண்டிருக்கும் குடம்மாள் தெருக் கதவைத் திறந்துவிடுவாள். உடனே வேம்பு ஐயர் வெளியே கிளம்புவார். கிழக்கு வெளுப்பதற்குள் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு ஆற்றில் இறங்கி அரைமணி நேரம் வரை குளிப்பார். பின் காவிக் கறை யேறிய வேஷ்டியைப் பாசி பிடித்த கல்லில் துவைப்பார். கால் மணி நேரம் வரை சந்தியா வந்தனம் செய்து முடித்த பின் ஏழு மணி சுமாருக்கு வீட்டை அடைவார். காலை போஜனத்தை முடித்துக் கொண்டதும் தெருத் திண்ணையில் வந்து உட்காருவார்.

"என்ன வே, சாமிநாதம்! எப்போ பொண்ணுக்குக் கலியாணம்? எங்கே போறாப்போலே?" என்பார் வேம்பு ஐயர்.

"இல்லிங்க, வாத்தியார் ஐயா! இந்த தைக்கு முடியாது போலே இருக்குது. பகவான் கடாக்ஷம் இருந்தா எல்லாம் நடக்கும். — நடவு நடக்குது, அதுக்காகத்தான் போறேன். — அது சரிங்க, என்னமோ வடக்கெல்லாம் ஒரே கலாட்டாவா இருக்குதாமே, அதென்னங்க சங்கதி? வாத்தியார்களெல்லாம் கூடச் சம்பளம் போதாதுன்னு 'ஸ்ட்ரைக்' பண்ணப் போறாங்களாமே, அதென்னங்க சங்கதி?" என்பார் சாமிநாதம்.

"அதென்னமோப்பா, என்னமோ சொல்லிக்கிறாங்க! வாத்தியாருங்க சம்பளம் போதாதுன்னு மந்திரி சபையைக் கேட்டிருக்காங்க. அவாளும் யோசனை செய்து சம்பளம் அதிகம் தருகிறேம்னு சொல்லியிருக்காங்க. இதெல்லாம் நமக்கெங்கே தெரியுது? அது சரி, தோட்டத்திலே என்னென்ன போட்டிருக்கே? அவரைக்காய், கத்தரிக்காய் எல்லாம் இருக்குமா?" என்பார் வேம்பு ஐயர்.

"அதுக்கென்ன, வாத்தியார் ஐயா! உங்களுக்கில்லாதது வேறே யாருக்கு?



இன்னிக்கிக் காய்கறி யெல்லாம் கொடுத்து அனுப்பறேன். நான் போயிட்டு வரட்டுங்களா?" என்று சொல்லிவிட்டு கடையைக் கட்டுவார் சாமிநாதம்.

சாமிநாதம், வேம்பு ஐயரிடம் படித்தவன் தான். பெரிய இடத்துப் பிள்ளை. அவனுக்கு மகிழங்குடியில் மூப்பது ஏக்கர் வரை நிலமுண்டு. பதினைந்து வருஷங்களுக்கு முன் அவனைக் காதைப் பிடித்துத் திருகியது போல் இப்போது திருக முடியுமா?

2

அன்று "ஆண்டே! பெரிய பண்ணையிலேயிருந்து இதைக் கொடுத்துட்டு வரச் சொன்னாங்க!" என்று சொல்லிவிட்டு ஒரு பெரிய மூட்டையை இறக்கி வைத்தான் சின்னு.

"என்னடா அது, என்ன விசேஷம்?" என்றார் ஐயர்.

"விசேஷ மொண்ணுமில்லீங்க. வாழை வெட்டினோம். வாத்தியார் ஐயாவுக்குக் கொடுத்துட்டு வாடான்னு கொடுத்து அனுப்பினாங்க. அதோடே அஞ்சி தேங்காயும் இருக்கு!" என்றான் சின்னு.

"குடம்மா, பெரிய பண்ணையிலேயிருந்து இதைக் கொடுத்து அனுப்பியிருக்காங்க! எடுத்துக்கிட்டுப் போ!" என்றார் ஐயர்.

"என்னப்பா, பழமா? எனக்குக் கொடு, அப்பா!" என்று பையன்கள் ஓடிவந்தார்கள்.

"அதோ, அம்மா கொண்டு போறா, சண்டை போடாமல் வாங்கிக்கங்க!"

இப்படிப் பேசிக் கொண்டிருக்கும் போதே பள்ளிக்கூட மணி அடித்து விட்டது. "சரி, நாழியாயிடிச்சு! டேய் விச்சு, இச்சு! கிளம்புங்கடா. பள்ளிக்கூடத்துக்கு!" என்று விரட்டிக் கொண்டு கிளம்பினார் ஐயர். பள்ளிக்கூடம் வந்து சேர்ந்ததும் பாடம் ஆரம்பமாயிற்று.

"ஏய், கோபு! ஏண்டா படிக்கமாட்டேங்கிறே? சொல்லிக் கொடுக்கிறதையும் கவனிக்க மாட்டேங்கிறே?—அது சரி, மேலத் தெரு தொட்டிமுத்தம் வீட்டிலே 'ஆளை அனுப்புங்க, வெண்ணெய் அனுப்பறேன்'னு சொன்னாங்க, போய் வாங்கிக்கிட்டு வா! ஏய், அவனோடு இன்னொருத்தனும் போடா!" என்றார் ஐயர்.

அவ்வளவுதான்; "நான் போறேன் ஸார், நானும் போறேன், ஸார்!" என்று எல்லாப் பையன்களும் கிளம்பி விட்டார்கள் கோபுவோடு. வாத்தியார் ஐயா எவ்வளவு சொல்லியும் ஒருவனும் கேட்கவில்லை.

'தட தட' வென்று மணி சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டெழுந்தார் வேம்பு ஐயர். வகுப்பில் ஒருவருமில்லை. சுவாரசியமாகக் கனவு கண்டு கொண்டிருந்த வேம்பு ஐயர், "அடேடே! பள்ளிக்கூடம் விட்டாச்சே, சாப்பாட்டுக்கு நாழியாச்சுதே! வெண்ணெய் வாங்கிக்கிட்டுப் போனான்களோ, என்னமோ!" என்று முணுமுணுத்துக் கொண்டே கிளம்பினார்.

வீட்டு வாசற்படி ஏறும்போது, தன் பேரப்பிள்ளை நிற்பது கண்டு ஐயருக்கு ஆச்சரியமாக இருந்தது. அதற்குள் அவருடைய பெண்ணும் வெளியே வந்தாள். "எப்போ அம்மா வந்தே? ஊரிலே எல்லாம் சௌக்கியமா? ஆம்படையானும் வந்திருக்கானா?" என்று கேட்டுக் கொண்டே ஐயர் புழக்கடைப் பக்கம் நடந்தார்.

கையில் செம்பு ஜலத்துடன் வந்த குடம்மாள், "நாஜும் ஸ்நானம் செய்யாமல்



# ஒரு யோசனை!



போலீஸ் இன்ஸ்பெக்டர் மகன்:—அப்பா! உனக்கு இவ்வளவு தொந்தரவு கொடுக்கிறானே, அவனை ஏன் கைது செய்யறதுதானே, அப்பா!

திருக்காளாம்: ஏழு மாசமாம்!" என்று சொல்லிக்கொண்டே செம்பைக் கொடுத்தாள். காலைக் கழுவிக்கொண்ட வேம்பு ஐயர், "சரிதான், செலவு காலம்!" என்று முணுமுணுத்தார்.

* * *

அன்று மணி ஒன்று இருக்கும். அவசர அவசரமாய் ஐயர் குளித்துவிட்டு வீட்டுக்கு வந்தார். அவருக்குக் கொஞ்ச நாட்களாக மன நிம்மதி கிடையாது. ராஜத்திற்குக் கடுமையான ஜுரம் கண்டு பள்ளியில் ஒன்றும் செய்ய முடியாமல், பலர் சொன்னதைக் கேட்டுப் பக்கத்தூரிலிருந்த ஆஸ்பத்திரியில் கொண்டு போய்ச் சேர்த்திருந்தார். அவளுக்கு அதிகமான உபத்திரவம் ஏற்பட்டு விட்டதால் ஐயர் பள்ளிக்கூடத்தில் லீவு போட்டு விட்டு, சில சாமான்களை எடுத்துப் போவதற்காக வீட்டுக்கு வந்தார்.

'என்னம்மா, ஏதோ!' என்று நினைத்துக்கொண்டு ஆஸ்பத்திரியை அடைந்த வேம்பு ஐயரிடம், "இதோ பாருங்க, உங்க பேரனை! உங்களைப் போலவே இருக்கான்!" என்று குடம்மாள் குழந்தையைக் கொடுத்தாள். "சரி, இரு! நான் போய் மாப்பிள்ளைக்குத் தந்தி கொடுத்துட்டு வருகிறேன்!" என்று தபாலாபீஸை நோக்கி நடந்தார் ஐயர்.

ராஜம் பிள்ளைப்பேறுக்காக வந்தது முதல் இன்று வரை வேம்பு ஐயருக்கு ஐந்நூறு ரூபாய் வரை செலவேற்பட்டு விட்டது. தெரிந்தவர்களிடமெல்லாம் கடன் வாங்கிச் செலவு செய்தார். கௌரவத்திற்கு மிகவும் பயந்தவராகையால் எப்படி இவ்வளவு பெரிய தொகையைத் திருப்பித் தரப்போகிறோம் என்று மலைப்புத் தட்ட ஆரம்பித்தது. கொஞ்ச நாட்களாய்ப் புருஷன் மனதில் வந்துபட்டுள்ள கலக்கத்தை உணர்ந்து குடம்மாள் தானும் கலங்க ஆரம்பித்தாள்.

## 3

"இந்தக் கணக்கை எப்படிப் போக்குவது, வாரி?" என்ற கேள்வி வேம்பு ஐயரின் சிந்தனையைக் கலைத்தது. பெரிய பண்ணை வீட்டுப் பிள்ளைகளுக்கு டியூஷன் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கும்போதே தன்னுடைய கவனம் வேறு இடத்திற்குச் சென்றது அவருக்கு அப்போதுதான் தெரிந்தது. ஆனாலும் அவருடைய மனம் மட்டும், "சிங்கப்பூரில் உபாத்தியாயர்களுக்கு நல்ல சம்பளமாம்!" என்று இரண்டாவது வகுப்பு வாத்தியார் காமேசுவரராவ் இரண்டு நாட்களுக்கு முன் சொன்னதிலேயே லயித்திருந்தது. கடைசியில் தான் சிங்கப்பூருக்குப் போய் நல்ல தொகை சம்பாதித்துக் கொண்டு வந்துதான் கடன்களை அடைக்க வேண்டும்; அங்கு போனால்தான் தானும் தன் குடும்பமும் முன்னுக்கு வரலாம் என்று முடிவு கட்டிக் கொண்டு அக்கிருந்து கிளம்பினார்.

"ஐயா வீட்டிலே இருக்காங்களா, வயலுக்குப் போயிருக்காங்களா?" என்ற வேம்பு ஐயரை, "என்ன வாத்தியாரய்யா, என்ன சமாசாரம்? இதோ வரேன்!" என்று சொல்லிக் கொண்டே வந்து வரவேற்றார் பெரிய பண்ணை முதலியார்.

"இல்லே...செலவுக்கு...!" என்று இழுத்தார் ஐயர்.

"அதுக்கென்ன, இவ்வளவுதானே!—கணக்கப்பிள்ளை, செலவு எழுதிக்கிட்டு வாத்தியார் ஐயாவுக்கு முப்பது ரூபாய் கொடு!" என்றார் பெரிய பண்ணை.

ஐயர் வீடு திரும்பும்போது பிடாரி குளத்து விளக்கு மங்கலாய் எரிந்து கொண்டிருந்தது. அந்தப் பக்கத்து விளக்குகளுக்கு அது சர்வ சாதாரணமான வியாதி. வீட்டுக்குச் சென்ற ஐயர், "குடம்மா, பட்டணம் வரைக்கும் போக வேண்டியிருக்கிறது. பத்திரமாய்ப் பிள்ளைகளைக் கவனிச்சுக்கோ! நான் ஒரு வாரத்திலே வந்திடுறேன். இந்தப் பத்து ரூபாயை வச்சுக்கோ; நான்

போய்விட்டு வருகிறேன்!" என்று சொல்லி விட்டுப் பிரிய மனமின்றி வண்டியில் கிளம்பினர்.

வண்டியில் சென்ற ஐயருக்கு, "பாவம்! குட்டம்மாவுக்கு ஒன்றும் தெரியாது; தெரிஞ்சா கவலைப்படுவாள்!" என்ற எண்ணம் உண்டாயிற்று.

"என்ன, ஐயா! வாயிலே என்ன. கொழுக்கட்டையா! எந்த ஊருக்கு டிக்கெட்?—சொல்லு!"

"ம...தராஸ்" என்று தடுமாறிக் கொண்டே பதிலளித்த ஐயரின் கையில் மறு நிமிஷம் மஞ்சள் டிக்கட் ஒன்று வந்து விழுந்தது.

விக்கிரவாண்டி சிறிய ஸ்டேஷன். அங்கு நிற்கும் ரயில்கள் ஒரு நிமிஷத்திற்குமேல் நிற்பதில்லை.

வண்டிக்குள் ஏறிய ஐயருக்குத் தாகம் அதிகமாயிருந்ததால், "ஏ, சோடா! ஒண்ணு கொடு, அப்பா!" என்றார்.

"டக்—உஸ்!"

'கப்...ப்' என்ற சத்தத்துடன் குடித்து விட்டு நிரணு சில்லறையையும், பாட்டிலையும் கொடுத்த ஐயருக்கு அப்போதுதான் ஒரு விஷயம் ஞாபகத்திற்கு வந்தது.

"சிங்கப்பூருக்குப் போக 'பாஸ்போர்ட்' வேணுமே!"

'சொரேர்' என்றது ஐயருக்கு. அதற்குள் மணி அடித்து வண்டி புறப்படவே, திடுதிடுவென்று ஓடி வந்து கதவைத் திறந்து கொண்டு பிளாட்பாரத்தில் குதித்தார்.

"என்ன, வாத்தியார் ஐயா! இறங்கிட்டீங்களே?" என்றது கம்பார்ட்மெண்டுக்குள்ளிருந்து அறிமுகமான குரல் ஒன்று.

"எங்க இறங்கிட்டீங்க? எதையாச்சும் வச்சுட்டிங்களா?" என்று கேட்டுக் கொண்டே ஓடி வந்தான் வண்டிக்காரன்.

"என் புத்தியைச் செருப்பால்தான் அடிக்கணும்!' என்று சொல்லிக்கொண்டே வண்டிக்காரனோடு ஸ்டேஷனுக்கு வெளியே வந்தார் ஐயர்.

* * *

மறுநாள் வழக்கம்போல் பள்ளிக்கூடத்து மணி அடித்தது. ஐயர் வேலைக்குக் கிளம்பினர். பையன்களெல்லாம், "வாத்தியார் ஐயா, குட்மார்னிங்!" என்று சொல்லிக் கொண்டே அவரைப் பின் தொடர்ந்து சென்றனர்.

# இரு புறத்திலும் இடி!

ரஜனி

ரஜாவில் இந்தியாவுக்குப் போகும் இலங்கை இந்தியர்களுக்கு மண்டபம் காம்பைத் தாண்டிக் கொண்டு இலங்கைக்குத் திரும்புவது பெரிய கண்டமாயிருப்பதும், மண்டபத்திலுள்ள புரொடக்டரின் யதேச்சாதிகார தர்பார் இந்தியர்களைக் கடுமையாகப் பாதிப்பதும் ஏற்கெனவே இந்தப் பத்திகளில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. பொது ஜனங்கள் ஏதாவது குறைகள் தெரிவித்தால் அவைகளை உடனுக்குடன் ஆராய்ந்து பார்க்கும் ஆற்றலுடையவர் ஸ்ரீ கிரியின் காரியதரிசியான ஸ்ரீ ராகவாச்சாரியார். இதை முன்னிட்டே ஸ்ரீ ராகவாச்சாரியாரிடம் இலங்கை இந்தியர்கள் மிகுந்த விசுவாசமும் நம்பிக்கையும் கொண்டிருக்கிறார்கள்.

பொது ஜனங்களின் புகார்கள் காதில் விழுந்ததும் ஸ்ரீ ராகவாச்சாரியார் மண்டபத்துக்கு நேரில் சென்று உண்மை நிலையை விசாரித்துத் தெரிந்து கொண்டு திரும்பியிருக்கிறார். அவ்விஷயமாக அவர் தம்முடைய அறிக்கையை டில்லி அரசாங்கத்துக்கும் அனுப்புவார். மண்டபத்திலிருந்து திரும்பிய ஸ்ரீ ராகவாச்சாரியார் சொல்வதிலிருந்து, பொதுஜனங்கள் தெரிவிக்கும் புகார்கள் பொய்யல்லவென்பது வெளியாகியிருக்கிறது.

## ஏன் தடுக்க வேண்டும்?

இலங்கையில் இந்தியர் மீது துவேஷம் மிக மிக உச்ச நிலையை அடைந்திருந்த 1939-ம் ஆண்டில் சரீர உழைப்புத் தொழிலாளர் எவரும் புதிதாக இலங்கைக்குப் போகக்கூடாது என்று டில்லி அரசாங்கம் தடை விதித்தது. அந்தத் தடையை அமல் நடத்துவதற்காகவே மண்டபத்தில் புரொடக்டர் ஆப் எமிக்ரண்ட்ஸ் என்று ஒரு அதிகாரியை இந்திய அரசாங்கம் நியமித்தது. இந்த அதிகாரி சென்ற ஒன்பது வருஷ காலமாகக் கும்பகர்ண விரதத்தைக் கைக்கொண்டிருந்து விட்டு இப்பொழுதுதான் கண் விழித்துக் கொண்டிருக்கிறாராம்! இலங்கைக்குத் திரும்புவதற்காக மண்டபத்துக்கு வரும் தொழிலாளரையெல்லாம் முதல் முதலாக, "எந்த வருஷம் நீ இலங்கைக்குப் போனாய்?" என்று அவர் கேட்கிறாராம். 1939-ம் வருஷத்துக்குப் பிறகு இலங்கை சென்றவர்களாயிருந்தால் அவர்கள் இலங்கைக்கு மறுபடி போகக்கூடாதென அவர் தடை செய்து விடுகிறார் என்று தெரிகிறது. 1939-ம் வருஷத்துக்கு முன்பே இலங்கையில் வசித்தவர்களென்று ருசுப்படுத்தும் தொழிலாளரை மட்டுமே இலங்கைக்கு மறுபடியும் போக அவர் அனுமதிக்கிறாராம்.

இலங்கையிலுள்ள இந்தியர்களில் பெரும்பாலோரைக் கப்பலேற்றி இந்தியாவுக்குத் திருப்பியனுப்பி விட சேனநாயகா தர்பார் ஏற்கனவே திட்டங்கள் வகுத்துக் கொண்டிருக்கையில், மண்டபத்திலுள்ள புரொடக்டரும் ஸ்ரீ சேனநாயகாவுக்கு உடந்தையாயிருப்பதுபோல் ரஜாவில் இந்தியாவுக்கு வருவோரை இலங்கைக்குத் திரும்ப முடியாதபடி தடுப்பானேன்? இப்படி இரண்டு புறத்திலும் இடிபட இலங்கை இந்தியர்கள் என்ன பாவம் செய்தனர்?

## முஸ்லிம் கொடை வள்ளல் மறைந்தார்

இலங்கையிலே ஜனாப் அப்துல் கபூரைத் தெரியாத இந்தியர் யாருமே இருக்க மாட்டார்கள். அகில உலகப் பிரசித்தி பெற்ற நவரத்தின வியாபாரியான ஜனாப் கபூர் ஐரோப்பிய நாடுகளிலே நடந்த அநேக பொருட் காட்சிச் சாலைக்குச் சொந்தச் செலவிலே இலங்கையின் நவரத்தினங்களை எடுத்துக் கொண்டு போய் இலங்கையின் செல்வாக்கை அதிகப்படுத்தியிருக்கிறார். இலங்கை முஸ்லிம்களின் கல்வி முன்னேற்றத்துக்காக இரண்டு கைகளினாலும் லட்சம் லட்சமாக அள்ளிக் கொடுத்திருக்கும் கொடை வள்ளல் அவர். அரபு பாஷையைப் போதிக்க ஒரு தனிக் கல்லூரி கட்டியிருக்கிறார். மற்றும் கல்வி முன்னேற்றத்துக்காகப் பெருந்தொகைகள் கொடுத்த இப் பெரியார் சென்ற வாரம் காலமாகி விட்டது இலங்கை முஸ்லிம்களுக்கு மகத்தான நஷ்டமாகும்.




# திருட்டு யானைக் குட்டி

ராஜி

ஒரு யானை எட்டுக் குட்டி யானைகளுடன் ஒரு காட்டில் வசித்து வந்தது. அந்த எட்டு யானைக் குட்டிகளும் பார்ப்பதற்கு ஒரே மாதிரி இருக்கும். அந்த யானைக் குட்டிகளில் ஒன்று மிகவும் பொல்லாததாயிருந்தது; இன்னொன்று ரொம்ப சாதுவாயிருந்தது. குணத்தில்தான் அவை வெவ்வேறு மாதிரியாயிருந்தனவே தவிர, உருவத்தில் கொஞ்சங்கூட வித்தியாசமேயில்லை.

இதனால் அந்த யானைக் குட்டிகள் என்ன அக்கிரமம் செய்தாலும் பெரிய யானை அவைகளைத் தண்டிக்க முடியவில்லை. எந்த யானைக் குட்டி குற்றவாளி என்று தெரிந்தாலல்லவா அதைப் பிடித்துத் தண்டிக்கலாம்?

ஒரு நாள் யானை தனக்கும் மற்ற யானைக் குட்டிகளுக்கும் தோசை வார்த்து வைத்துவிட்டு வெளியே சென்றது. அன்று இரவு திரும்பி வந்து பார்த்தால் தோசையில் பாதிக்கு மேல் காணவில்லை.

மறு நாள் யானை நிறைய ரொட்டி செய்து வைத்திருந்தது. அன்றைய தினமும் பாதி ரொட்டிக்கு மேல் காணாமற் போகவே யானைக்குக் கோபம் தாங்கவில்லை. எட்டு யானைக் குட்டிகளையும் கூப்பிட்டு வரிசையாக நிறுத்தி வைத்து, "உண்மையைச் சொல்லிவிடுங்கள். நேற்றுச் சமையலறைக்குப் போய்ப் பாதிக்குமேல் நான் வைத்திருந்த தோசைகளை யார் தின்றது? இன்று ரொட்டிகளை யார் தின்றது?" என்று ஆத்திரத்துடன் கேட்டது.

"எங்களுக்குத் தெரியவே தெரியாது!" என்று எல்லா யானைக் குட்டிகளும் ஒரேயடியாகச் சாதித்து விட்டன.

யானை என்ன செய்யும்? இந்தத் திருட்டை எப்படியாவது கண்டு பிடிக்க வேண்டும் என்று நிச்சயித்துக் கொண்டு அன்று அவைகளை விட்டுவிட்டது.

மறு நாள் சமையலறைக்கு அருகில் யானைக்குட்டிகளுக்குத் தெரியாமல் யானை ஒளிந்து கொண்டிருந்தது. அச் சமயத்தில் ஒரு யானைக் குட்டி வெகு அவசரமாகத் தும்பிக்கை நிறையத் தோசைகளை எடுத்துக் கொண்டு ஓட்டம் ஓட்டமாக ஓடிற்று. திருட்டு யானைக் குட்டியைப் பிடித்துவிட்டோம் என்று யானை சந்தோஷத்துடன் வாசல் பக்கம் வந்தது. அதற்குள் எட்டு யானைக் குட்டிகளும் சேர்ந்து கண்ணை மூச்சி விளையாட ஆரம்பித்துவிட்டன. யானைக்கு எந்த யானைக் குட்டி தோசைகளைத் திருடிக் கொண்டு வந்தது என்று கண்டு பிடிக்க முடியவில்லை.

ஏமாற்றமடைந்த யானைக்கு ஒரு யோசனை தோன்றிற்று. அதன்படி அது எல்லா யானைக் குட்டிகளையும் அழைத்து, "உங்களில் யாரோ தினந்தோறும் தின்பண்டங்களைத் திருடி வருகிறீர்கள். அது யார் என்று

தெரியவில்லை. விசாரித்தாலும் உண்மையைச் சொல்லமாட்டோம் என்கிறீர்கள். ஆகையினால் நான் சமையலறையில் சற்று உயரமான இடத்தில் ஒரு தகர டப்பா வைத்திருக்கிறேன். அது மந்திர டப்பா. நீங்கள் ஒவ்வொருவரும் அந்த அறைக்குள் தனித்தனியே சென்று அந்த டப்பாவின் அடிப்பாகம் வரை உங்கள் துதிக்கையை விடுங்கள்!" என்று சொல்லிற்று.

அப்பொழுது ஒரு புத்திசாலியான யானைக் குட்டி, "அம்மா, அம்மா! திருடாத யானைக்குட்டிகளை டப்பா ஒன்றும் செய்யாதே!" என்று கேட்டது.

அதற்கு யானை, "ஒன்றும் செய்யாது!" என்று சொல்லி அத்துடன் நிறுத்திக்கொண்டது.

ஒவ்வொரு யானைக் குட்டியும் தகர டப்பா வைத்திருந்த அறைக்குள் தனித் தனியாகச் சென்று திரும்பி வந்தது. ஆனால் ஒரு யானைக் குட்டியின் துதிக்கையையாவது தகர டப்பா பிடித்துக் கொள்ளவில்லை. உடனே எல்லா யானைக் குட்டிகளும் சந்தோஷமடைந்து, "நாங்கள் ஒருவரும் திருடவில்லை; யாரோ வெளியிலிருந்து வந்து திருடியிருக்கிறார்கள்!" என்று சொல்லிக் குதித்தன.

உடனே யானை, "இதோ, திருட்டு யானைக் குட்டியைக் கண்டு பிடித்து விடுகிறேன். எங்கே, நீங்கள் வரிசையாக நின்று உங்கள் துதிக்கையை நீட்டுங்கள்!" என்று சொல்லிவிட்டு, ஒவ்வொரு யானைக் குட்டியின் துதிக்கையையும் நன்றாகப் பார்த்துக் கொண்டு வந்தது.

எட்டாவது யானைக் குட்டியின் துதிக்கையைப் பார்த்ததும், "இதோ, கண்டு பிடித்து விட்டேன்!" என்று தன் துதிக்கையினால் எட்டாவது யானைக் குட்டியின் காதைப் பிடித்துக் கொண்டது. மற்ற யானைக் குட்டிகள் ஒன்றும் புரியாமல் விழித்தன.

"குழந்தைகளே! அந்தத் தகர டப்பா மந்திர சக்தி வாய்ந்ததல்ல. அது ஒரு சாதாரண டப்பாதான். ஆனால் நான் அந்தத் தகர டப்பாவின் அடியில் பச்சை வர்ணப் பொடியைத் தூவியிருந்தேன். உங்களுடைய தும்பிக்கையின் நுனியில் பச்சை வர்ணம் இருப்பதிலிருந்து, நீங்கள் யாவரும் துதிக்கையைப் பயமில்லாமல் தகர டப்பாவிற்குள் விட்டிருக்கிறீர்கள் என்று தெரிகிறது. ஆனால் இந்த யானைக் குட்டி மாத்திரம் திருட்டு யானைக் குட்டியானதால் பயந்து துதிக்கையைத் தகர டப்பாவிற்குள் விடாமலே என்னை ஏமாற்றியிருக்கிறது. இதோ பாருங்கள், அதன் துதிக்கையில் கொஞ்சங்கூட வர்ணத்தைக் காணோம்!" என்று யானை சொல்லிற்று. உடனே எல்லா யானைக் குட்டிகளுக்கும் விஷயம் புரிந்துவிட்டது. திருட்டு யானைக் குட்டி மாத்திரம் தலைகுனிந்து நின்றது. அன்று முதல் அது திருடுவதையே விட்டுவிட்டது.

---



## சொல்லித் தந்துட்டான்!

★

மணி:— டேய் கிட்டு! எங்கள் வீட்டிலே என்ன குழந்தை பிறந்திருக்குன்னு சொல்லுடா, பார்க்கலாம்? சாமு, நீ சொல்லாதேடா!

கிட்டு:— ஆண் குழந்தை!

மணி:— இல்லே, இல்லவே யில்லே!

கிட்டு:— பெண் குழந்தை!

மணி:— டேய், சாமு உனக்கு சொல்லித் தந்துவிட்டான்!



# சொர்க்கலோகம் போலசிலோன் யாராலாச்சுது?

விந்தன்



கதையைக் கேட்டியா, தம்பி!
கதையைக் கேட்டியா?
கண்டியிலே சொல்லிக்கிட்ட
கதையைக் கேட்டியா?

சொர்ணம்போல மண்ணிருந்தும் சோம்பலினாலே
சும்மாக்கிடந்த சிங்களவன் சொந்தம்பேசுறான்!
சொர்க்கலோகம் போலசிலோன் யாராலாச்சுது?
சொகுசான வாழ்க்கை இங்கு யாரால்கிடைச்சுது? (கதை)

நாங்களிருந்த ஊரைத்தேடி நயந்துவந்தாங்க
நாலுநடை நடந்துபல்லை இளிச்சுநின்னாங்க
'வாங்க!' என்று சொல்லிவாசல் காத்துநின்னாங்க
வந்தபின்பு வம்புபேச மாட்டோமின்னாங்க! (கதை)

கடலிருந்தால் பணந்தருவோம் கவலையேவேணாம்
கண்ணாலம் பண்ணிவைப்போம் கஷ்டமும்வேணாம்
உடன்பிறந்த அண்ணன்தம்பி போலிலங்கையில்
ஒற்றுமையா யிருந்திடுவோம் உறுதியின்னாங்க! (கதை)

சொன்னசொல்லை நம்பி இங்கே வந்துசேர்ந்திட்டோம்
சொந்தநாட்டைப் போலிதுவும் என்றுஎண்ணிட்டோம்
பொன்னான பூமியெங்கும் மண்டிக்கிடந்த
புதர்களையெல் லாமழித்துப் பண்படுத்திட்டோம்! (கதை)



காடுமலை மேடுபள்ளம் என்றுபார்க்கலே
கல்லும்மண்ணும் என்றுமூஞ்சைச் சுளிச்சுநிற்கலே
பாடுபட்டுத் தோட்டம்வச்சிப் பாத்திகட்டிட்டோம்!
பாங்கான தேயிலைக்குப் பயிரும்வச்சிட்டோம்! (கதை)

வேகாத வெய்யிலிலே வேலைசெஞ்சிட்டோம்
விலையென்று தெரியாமல் வேர்வைசிந்திட்டோம்
சாகாமல் செத்தும்உள்ளம் சோர்ந்துவிடாமல்
சண்டாளர்க் காகஉசிரை விட்டுத்தொலைச்சிட்டோம்! (கதை)

பட்டகஷ்ட மெல்லாம்இன்று பாழாய்ப்போச்சுது
'பயணம்எப்போ?' என்றுகேலி செய்யலாச்சுது!
வட்டமிட்டு ஆள்பிடிச்ச காலம்போச்சுது
வால்பிடிச்சிச் சுற்றிவந்த நாளும்போச்சுது! (கதை)

நன்றியில்லாச் சிங்களவன் நியாயம்பேசுறான்!
நாளுக்கொரு சட்டம்போட்டு நோட்டம்பார்க்கிறான்
'சென்றிடுவீர் இங்கிருந்து!' என்றுசொல்கிறான்
'சிங்களவர் போதும்' என்று சிலம்பேசுறான்! (கதை)



பணம்அனுப்ப வேணுமென்றால் தடைவிதிக்கிறான்
பத்துநடை நடந்துகாலை நோகவைக்கிறான்
கலங்கிநின்றால் 'ஏ'பாரம் எடுத்துநீட்டுறான்
கட்டிக்காட்டி 'இந்தியன்னு எழுது!' என்கிறான்! (கதை)

'உரிமைஏதும் உங்களுக்கு இல்லை' என்கிறான்
'உங்கபாட்டன் பிறந்ததெங்கே?' என்றுகேட்கிறான்!
சிரிக்காமல் இதனைக்கேட்டு என்னசெய்வது?
செத்தபாட்டன் இங்குவந்து பிறக்கப்போறானே! (கதை)

புத்தபக வானைப்போற்றும் புண்ணியர்களாம்!
போதிமரம் சுற்றிவரும் கண்ணியர்களாம்!
இத்தனையும் செய்கிறாங்க ஏனோதெரியலே!
ஏங்குகிறோம் இலங்கையிலே ஏழுலட்சம்பேர்! (கதை)




### சமாதானம் எதற்கு?

ஒருவர் ஒரு சமயம் தம் நண்பர் வீட்டுக்குச் சாப்பிட வருவதாக ஒப்புக் கொண்டார். பிறகு ஏதோ அசௌகரியம் காரணமாகப் போகவில்லை. அந்த நண்பரைப் பலநாட்களுக்குப் பிறகு சந்தித்தார். அன்று தாம் அவர் வீட்டுக்கு வராததற்குச் சமாதானம் சொல்ல நினைத்தார்.

"நமஸ்காரம்; ரொம்ப நாளாயிற்று, பார்த்து. தீபாவளியன்று என்னை உங்கள் வீட்டில் சாப்பிட அழைத்தீர்கள், இல்லையா? அன்றைக்குப் பாருங்கள்......"

"நானு? உங்களைச் சாப்பாட்டுக்கு அழைத்தேனு? நீங்கள் வந்தீர்களோ?"

★

### நல்ல எச்சரிக்கை!

நெருப்பணைக்கும் படை நிலையத்தில் கணகணவென்று டெலிபோன் மணி ஒலித்தது.

**ஆபீஸர்:**—ஹலோ! யார் அது?

**குரல்:**—நான்தான் ஜனார்த்தனம் பேசுகிறேன்; புதிய பங்களா ஒன்று வாங்கி அதில் அற்புதமான தோட்டம் போட்டிருக்கிறேன்......

**ஆபீஸர்:**—ஹலோ!—அது சரி; தீ விபத்து எங்கே?

**குரல்:**—ஹலோ! கொஞ்சம் கவனிக்க வேண்டும். என் தோட்டத்தில் நான் வைத்திருக்கும் செடிகளில் சில மிக விலை உயர்ந்தவை. மேலும்......

**ஆபீஸர்:**—ஹலோ! நீங்கள் தவறுதலாக இந்த நம்பரைக் கூப்பிட்டிருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன்......

**குரல்:**—இல்லை, இல்லை. என் பக்கத்து வீடு தீப்பிடித்துக்கொண்டு எரிகிறது. உங்கள் நெருப்பணைக்கும் எஞ்சினும் ஆட்களும் வந்தால் என் தோட்டத்தை மிதித்துப் பாழாக்கி விடுவார்களே என்று பயந்து எச்சரிக்கை செய்யக் கூப்பிட்டேன்!

### ஓகோ!

"ஸார், உங்களிடம் மிகவும் நல்ல புத்தகங்களெல்லாம் இருக்கின்றன. ஆனால் அந்தப் புத்தகங்களை ஒழுங்காக வைப்பதற்குத் தகுந்த பீரோதான் இல்லை!"

"அது சரிதான், ஸார்! அந்தப் பீரோவையும் யாரிடமாவது இரவல் வாங்குவது என்றால் கொஞ்சம் கஷ்டமாயிருக்கிறது, பாருங்கள்!"

★

### சரிதான்!

**டாக்டர்:**—தலைவலி மண்டையைப் பிளக்கிறது; ஜுரமும் கடுமையாயிருக்கிறது! தாங்க முடியவில்லை. டாக்டரிடம் போக வேண்டும்.

**நண்பர்:**—என்ன, நீங்களா டாக்டரிடம் போகவேண்டும்? நீங்களே ஒரு பிரபல டாக்டராயிற்றே! உங்களைத் தேடிக் கொண்டு எத்தனையோ நோயாளிகள் வருகிறார்களே!

**டாக்டர்:**—அது வாஸ்தவந்தான், ஸார்! ஆனால் நான் 'பில்' பண்ணுவது அதிகமாயிருக்குமே!

★

### அவர் கவலை!

**ஒருவர்:**—ஸார், பாருங்கள்! உங்கள் பையன் மேல்மாடியிலிருந்து ஒரு முறம் கரியை என் மேல் கொட்டிவிட்டான்!



**மற்றவர்** (ஆத்திரத்துடன்):—அப்படியா? முட்டாளாயிருக்கிறானே! கரி மூட்டை என்ன விலைக்கு விற்கிறது என்று அவனுக்குத் தெரிந்தால்தானே!

# கண்ட்ரோல் ராஜ்யம்

விட்டலாபுரம்
7—11—48

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

பணப் பெருக்கத்தைத் தடுப்பதற்கு உணவு கண்ட்ரோல் மீண்டும் அமுலுக்குக் கொண்டு வரப்படுமென்று சொல்லப்படுகிறது. உணவுப் பயிர்கள் சாகுபடி செய்பவர்களில் 100-க்கு 70 பேர் விவசாயிகள். 20 சதவிகிதம் மத்தியதர வகுப்பினர். 10 சதமே தான் பெரும் மிராசுதார்களும் மிட்டாதார்களுமாக இருக்கிறார்கள். இந்த 90 சதவிகிதத்தினரிடம் பணப் புழக்கம் அதிகப்பட்டிருக்கிறதா? இல்லவே இல்லை. ஏனெனில் நெல்லும், கம்பும் பிற தானியங்களும் எவ்வளவு விகிதம் கூடி விற்கிறதோ அதற்கு 4 மடங்குக்கு அதிகமாகவே வாழ்க்கைக்கு அவசியமான புளி, மிளகாய் வற்றல் எண்ணெய் முதலியவைகளும், பருத்தி விதை, கடலைப் புண்ணாக்கு உரம் முதலியவைகளும் கூடி விற்கின்றன. எனவே அவர்களது வாழ்க்கையில் 1939-க்கும் 1948-க்கும் வித்தியாசமே பண விஷயத்தில் இல்லை.

ஆகவே, கண்ட்ரோல் அவர்களுக்கு நன்மை அளிக்கவில்லை. கண்ட்ரோல் விநியோகம் கிராமவாசிக்கு உணவைப் பகிர்ந்தளிக்கிறதா? இல்லை. சர்க்கார் நிர்ணயிக்கும் விலையில் கிராமத்தில் விளையும் நெல் கொள்முதல் செய்யப்பட்டு நகரத்துக்கும் மற்ற இடங்களுக்கும் போய் விடுகிறது. கிராமவாசி உள்ளூரின் சில்லறை விலைக்கு வாங்க முடிகிறதில்லை. எனவே A கூப்பன் B கூப்பன் C கூப்பன் என்று கேட்டு கிராம முனிசிப்பின் வீட்டு வாசலில் தவம் கிடந்து, காணிக்கை செலுத்திப் பெற்றுக் கொள்ளவேண்டும்.

சென்னையில் உணவு மந்திரி போடுகிற ஆர்டர் பற்றிக் கிராம முன்சீப்புக்கு அக்கறை கிடையாது. கூப்பன் வாங்கினாலும் ரேஷன் கடையில் சரக்கு இராது. உளியும் மண்வெட்டியும் எடுத்து வேலை செய்யும் மக்களுக்கு எட்டு அவுன்ஸ் ரேஷன் வாரத்தில் இரண்டு நாளைக்குக் கொடுக்கப்படும் அநியாயத்தை நாங்கள் கண்ணாரக் கண்டவர்கள். எனவே இந்த கண்ட்ரோலினால் கிராம மக்கள் அரை வயிற்றுக் கஞ்சியும் அற்புதமான மக்கார் சோளமும் உண்டு அவஸ்தைப் படுவார்கள். எல்லோருக்கும் சம பங்கீடு என்பது எட்டாக் கனியாகி விடுகிறது.

கண்ட்ரோலினால் உணவு தானியம் விருத்தியடைந்து விடுகிறதா? இல்லை. முதலில் கொள்முதல் செய்யும் வியாபாரி ஒருவர். அவர் சரக்கைத் தேக்கிவைத்துக் கொள்கிறார். அவரிடமிருந்து 'ரீடெய்லர்' என்பவர் வாங்கி ஜனங்களுக்கு விநியோகம் செய்கிறார். எனவே மூட்டைக்குச் சராசரி இவர்கள் இருவரும் நாலு படி 'பாடுவாசி' எடுப்பார்கள்.

விளையும் பொருள் அங்கங்கே விவசாயிகளிடமிருந்து நேரே வாங்கிச் சாப்பிடுபவர்கள் கைக்கும் போகும்போது உணவுதான்யம் கெடாது நன்றாயிருக்கும். தரம் உயர்வாயிருக்கும். ஏனெனில் நேரில் வாங்கிச் சாப்பிடுபவர்கள் கவனித்துத் தரத்தை உத்தேசித்து, விலையைக் கொடுத்து வாங்குவார்கள். நெல் உற்பத்தியாளரும் தனக்கு நல்ல விலை கிடைக்க வேண்டும் என்பதற்காக நெல்லைக் காயவைத்துச் சாவி, புழுதி யில்லாமல் வைத்திருப்பார். ஆனால் இப்பொழுது சர்க்கார் நிர்ணயித்த விலைதான் எல்லா நெல்லுக்கும் என்று ஏற்பட்டு விட்டதனால் உற்பத்தியாளருக்கு அசிரத்தை ஏற்பட்டுவிடுகிறது. சரக்கின் தரமும் கெட்டுவிடுகிறது. அதுவுமல்லாமல் மொத்த வியாபாரிகள் போதுமான 'ஸ்டாக்கிங்' வசதியின்றி ஏதோ கடனுக்குச் செய்கிற வேலையாக லாபத்தை மட்டும் பார்த்துக்கொண்டு போய் விடுகிறார். எனவே, நெல் உற்பத்தியாளருக்குக் கொடுக்கப்படும் நெல் விலையிலிருந்து ரீடெய்லர் ஜனங்களுக்கு விநியோகிக்கும் விலை கோட்டைக்கு 7, 8 ரூபாய் உயர்கிறது. அதனால் உணவுப் பயிருக்குச் சம்பந்தமில்லாத பலருக்குப் பிழைப்பு கிடைக்கிறது என்பதைத் தவிர உற்பத்தியாளருக்கும், வாங்கிச் சாப்பிடுபவர்களுக்கும், உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கும் நிச்சயமாக இந்தக் கண்ட்ரோலினால் அனுகூலமில்லை.

இவை எல்லாவற்றையும்விட மனிதனுடைய ஒழுக்கம் கண்ட்ரோலினால் கெட்டுவிடுகிறது. எவ்வளவு பெரிய நேர்மையான மனிதனும் வீட்டில் குழந்தைகள் "சாதம், சாதம்" என்று கூக்குரலிடும்போது படி அரிசி 10 ரூபாயானாலும் வாங்கத் தயாராகிறான். அச்சமயம் அது 'பிளாக் மார்க்கெட்' என்கிற வேதாந்தம் நினைவு பெறுவதில்லை.

கண்ட்ரோலினால் சில்லறை அதிகாரிகளின் அட்டகாசமும் கிராம மக்களின் அவஸ்தையும் அதிகமாகின்றன. இது எப்படி? கண்ட்ரோலை அடுத்து ஏகபோகக் கொள்முதல். அப்படியென்றால் குடித்தனக்காரருடைய வீட்டைக் கி. மு. விலிருந்து ஜில்லா கலெக்டர் வரை ஒவ்வொருவரும் எத்தனை தடவை வேண்டுமானாலும் சோதிக்கிறது என்பதுதான். அந்த வீட்டில் வீட்டு விலக்குள்ள ஸ்திரீ இருந்தாலும் சரி, பிரசவம் செய்த பெண்கள் இருந்தாலும் சரி, இவர்களுக்குக் கவலையில்லை. இரண்டு போலீஸ் ஜவான்களும் இந்த ஆபீஸர்களில்—முக்கியமாக F. S. O., R. I. என்று சொல்லப் படுகிற வர்க்கம்—யாரும் தடதடவென்று வீட்டுக்குள் புகுந்து தோசை மாவு மூடி வைத்திருக்கிற சட்டியையும் திறந்து பார்ப்பார்கள். இருபத்தைந்து ரூபாய் கொடுத்துவிட்டால் பேசாமல் போய் விடுவார்கள்.

காங்கிரஸ் சர்க்காருக்குப் பெரிய அபகீர்த்தியைத் தேடித் தருவது இந்த புண்ணியவான்களுடைய வேலையாகவிருக்கிறது. ஆகவே கண்ட்ரோல் என்னும்போது கிராம மக்களுடைய வயிறு கொதிக்கிறது. நெஞ்சம் படபடக்கிறது. இந்த உணர்ச்சியை எதிரொலிக்கக் கூடிய மகானும் மறைந்தார். கிராம ஜனங்கள் 'காந்தி ஐயா மறைந்தார், கண்டபடி ராஜ்யம் வருகிறது' என்கிறார்களே, அது சர்க்கார் காதில் விழவில்லையா?

ஏகபோகக் கொள்முதலைக் கைவிட்டு, நிலச் சுவான்தாருக்கு மேல் வாரமோ, அல்லது குத்தகையோ வாக்கூடிய விகிதத்தை ஏக்கர்

வாரியாகக் கணக்கிட்டு, அவர்களுக்குச் செலவுபோகப் பாக்கி யுள்ளவைகளைக் கோட்டை விலை நிர்ணயித்து, அதன்படி அளக்க நோட்டீஸ் அனுப்பி நெல்லை அளந்து கொண்டுபோக வேண்டும். அப்படி அளக்காத நிலச்சுவான்தார்களைச் சட்டப்படி விசாரணை செய்து முடிவு செய்யட்டும்.

அநியாயமாகக் கிராம ஜனங்களைப் பணப் பெருக்கத்தின் பேரால் தொந்தரவு படுத்த வேண்டாம். சில்லறை அதிகாரிகளின் நேர்மையை நம்பி கிராம ஜனங்களின் அன்றாட வாழ்க்கையைப் பணயம் வைக்க வேண்டாம்.

சர்க்கார் உணவு விநியோக விஷயத்தில் என்ன ஆர்டர் போட்டாலும் அது பேப்பரில் விவரமாக வந்துவிடும். போட்ட ஆர்டரின் நலனில் பாதியை நகரத்திலுள்ளவர்கள் அனுபவிப்பார்கள். உதாரணமாக "எட்டு அவுன்ஸ் அரிசியும் இரண்டு அவுன்ஸ் ரவையும் ரேஷன் கடையில் கொடுக்கப்படும். நிவாரணக் கடைகளிலும் கொடுக்கப்படும்" என்பது சர்க்கார் உத்தரவு. இந்தத் தாலுகாவில் அக்டோபர் ஐந்தாம் தேதியிலிருந்து கொள்முதல் கொடுமை ஆரம்பித்தாகி விட்டது. ஆனால் பஞ்ச நிவாரணக் கடைகளில் பெரும்பகுதி அடைத்து வைத்தது திறக்கப்படவேயில்லை. கலெக்டரிடம் கேட்டால் "எந்தக் கிராமம் பஞ்சத்தி லடிபடுகிறதோ அந்தக் கிராமத்தில் திறக்கப்படும்" என்கிறார். பஞ்சம் என்பது என்ன? சர்க்கார் அகராதியில் அதற்கு என்ன அர்த்தம்? ஒரு கோட்டை நெல் விலை 35 ரூபாய்க்குச் சில்லறை விலையில் கிடைத்தது. இந்த ஒரு மாதத்திற்குள் ஒரு கோட்டை நெல் விலை 60 ரூபாய் ஆகிவிட்டது. இனி அறுவடை காலம் பங்குனி மாதந்தான். எனவே தை மாதம் படி நெல் ஒரு ரூபாய்க்குக் குறையாது. இது தாமிரவர்ணி ஜலம் பாய்ந்து பக்கத்துக்கு இருபத்தாறு கோட்டை நெல் விளையும் பிரதேசத்தில். வாழ்ந்துவிட மாட்டார்களா, கிராம ஜனங்கள்!

பணக்காரர்கள் கிராமத்திற்கு ஒன்றிரண்டு பேர்கள். சர்க்கார் கொள் முதலினால் அவர்களுக்குப் பணம் நஷ்டமாகுமே தவிர கஷ்டம் ஏற்படாது. ஏனெனில் இந்த அதிகாரிகளுக்கு அவர்களைக் கண்டால் பயமும், பணம் பெறலாமே என்கிற ஆசையும் ஏற்படுகிறது. மற்றபடி நடுத்தர வகுப்பாருடைய வீட்டிலேயும் பயிரிடுகிற ஹரிஜனங்களுடைய வீட்டிலேயும் இருக்கிற நெல்லைத் தட்டி அளந்து கொண்டு போய் விடுவார்கள். இவர்கள் கணக்கிடுகிறபடி அவர்கள் வயிறு பசிப்பதில்லை. எனவே தங்கள் நெல்லை சர்க்காருக்கு 24 ரூபாய்க்கு அளந்து விட்டு 60 ரூபாய்க்கு அரிசி வாங்கிச் சாப்பிடும் ஆத்மாக்கள் கிராமங்களில் எத்தனையோ பேர்.

இது கற்பனையல்ல; நான் என் தாலுகாவிலுள்ள கிராமங்களில் பிரத்யட்சமாகப் பார்க்கும் கொடுமை.

வி. எஸ். வெங்கடாச்சாரி.

சேடப்பாளையம்
27—10—48

## 'அருமைக்காரர்கள்' பதவி ஒழியுமா?

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

தென்னாட்டிலே வெள்ளாளர் குலத்தினர் வீட்டில் திருமணம் நடக்கவேண்டியிருந்தால், அருமைக்காரர் என்ற அந்த ஒரு மனிதன் இல்லாமல் திருமணம் நடைபெற முடியாது. அருமைக்காரர் என்பவர் அவர்கள் இனத்திலேயே அருமை என்னும் சாங்கியம் செய்துகொண்டு வாச்சாக வரப்பட்ட குருக்கள் போன்றவர். இவர் இல்லாமல் எந்தத் திருமணமும் அவர்கள் இனத்தில் நடைபெறாது. அதற்காகப் பணம் கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் அவர் "அந்தப் பெண்ணினுடைய மூப்பாட்டி வர்க்கத்தில் நடைமுறை சரியில்லை; ஆகவே நான் வரமுடியாது" என்று சொல்லி, மணமக்களின் வாழ்க்கையைப் பாலைவனமாக்கி விடுவார். அருமைக்காரர் வராவிட்டால் உறவினர்கள் யாரும் திருமணத்திற்கு வரமாட்டார்கள். அப்படியே யாரும் வராமல் திருமணம் நடத்தி விட்டால், அவர்களை ஜாதிக் கட்டுப்பாடு செய்து விடுவார்கள்.

மணமாகாத ஆண் பெண்களிற் சிலர் தவறான வழியில் நடந்து வாழ்க்கையைப் பாழாக்கிக் கொள்வதற்கும், ஆண் பெண் சிலர் தற்கொலை செய்து கொள்வதற்கும் காரணமாயிருப்பவர்கள் இந்த அருமைக்காரர்கள்தான். ஆகவே வெள்ளாளப் பெருங் குடிமக்கள் அருமைக்காரர்கள் பதவியை ஒழித்துக் கட்டுவார்களா?

பா. குழந்தை.

7—11—48
புதுவை

## புதுச்சேரி சம்பவம்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

கடந்த சிலகாலமாக பிரஞ்சிந்தியாவின் அரசியல் நிலைமையைத் தாங்கள் கவனித்து வந்திருப்பீர்கள். அன்னியர் ஆட்சியை அறவே மாற்றவும், இந்தியாவுடன் இரண்டறக் கலக்கவும் உழைத்து வருகிறது பிரஞ்சிந்திய தேசிய காங்கிரஸ். ஆனால் அதற்கு நேர்மாறாக ஹைதராபாத் மக்களின் சுதந்திரத்திற்கு இடையூறாக அங்கோர் "ரஸ்வி" கூட்டம் இருந்ததுபோல், இங்கு பிரஞ்சு ஏகாதிபத்தியத்திடம் மக்களின் உரிமை உணர்ச்சியை உருக்குலைய வைக்க ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறது "குபே கோஷ்டி" பிரஞ்சிந்திய சோஷியலிஸ்ட் கட்சி என்ற போர்வையால் இக்கட்சிக்கு உழைப்பவர்கள் எல்லாம் வாழ்க்கையில் வழுக்கி விழுந்தவர்கள். மனிதத் தன்மையை இழந்த இவர்கள் ஒரே ஆர்வத்துடன் "பிரஞ்சு யூனியனில் ஒன்று சேருவோம்"—'வீவ் லா பிரான்ஸ்" ("பிரஞ்சு வாழ்க!")—"பப்பா குபேக்கு ஜே" என்ற கோஷங்களின் கீழ், வழிப்பறி, கொலை, முதலியவையே கட்சியின் கொள்கையாக நடத்தி வருகின்றனர். சமீபத்தில் நடந்த முனிசிபல் தேர்தலில் இவர்கள் நடந்து கொண்ட முறையை ஒரு சிறு நிகழ்ச்சியால் தங்களுக்குத் தெரிவிக்கின்றேன்:—ஒரு போலிங் ஸ்டேஷனில் (வோட்டுச் சாவடியில்) அன்று முழுவதும் வோட்டுப் போட்ட மொத்த வாக்காளர்கள் சுமார் 100லிருந்து 150 வரைதான் இருப்பார்கள். ஆனால் அன்று மாலை 7 மணிக்கு எண்ணிக்கையாளர்கள் கணக்கெடுக்கும்போது, பி. இ. சோஷியலிஸ்ட் கட்சியினருக்கு 400க்கு மேற்பட்ட வோட்டுகளும் காங்கிரஸுக்கு 32 தான் கிடைத்தன என்று கூறினார்கள்!

துரை ராஜேந்திரன்

● இந்த இதழில் வெளியாகி யிருக்கும் வட்டமேஜைக் கடிதங்களில் விட்டலாபுரம் வி. எஸ். வெங்கடாச்சாரி எழுதி யிருக்கும் கடிதத்துக்கு ரூ. 25 பரிசு வழங்கப்பட்டது.



# சிக்குவின் சட்டை

எஸ்.வி.எஸ்

“ஆவியாணைச் சந்நதியில் தாலி கட்ட மறந்து போனாங்களாம். அந்த மாதிரி ஊருக்கெல்லாம் சட்டையும் பாவாடையும் தைத்துக் கொடுத்துவிட்டு, நம்ம குழந்தைக்குச் சட்டை தைக்க மறந்து போய்விடப் போறீங்கோ!” என்று கன்னியப்பனின் மனைவி எல்லம்மாள் தினந்தோறும் சொல்லி வந்தாள். அதுவும் தீபாவளி நெருங்க நெருங்க அவளுடைய வற்புறுத்தலும் அதிகமாகியே வந்தது. அவனும் ‘ஆகட்டும்’ என்றுதான் பதில் சொல்லிக் கொண்டு வந்தான்.

கன்னியப்பன் ஒரு தையல்காரன். அவன் மாம்பலத்தில் ஒரு வீட்டுத் திண்ணையில் கடை போட்டிருந்தான். கடை சிறிதாக இருந்தாலும், திறமை குறைவாக இருந்தாலும் பெண் தெய்வங்களிடையே ‘டெய்லர் கன்னியப்பன்’ என்ற பெயரில் அவன் வெகு பிரசித்த மடைந்திருந்தான்.

மாசம் அவனுக்கு, ஏதோ அதிக சிரமமில்லாமல் குடும்பத்தை நடத்தக் கூடிய வருமானம் வந்து கொண்டிருந்தது. ஆனால் அவனுடைய வருமானம் உச்ச நிலையை வருஷா வருஷம் தீபாவளியின் போதுதான் அடைவது வழக்கம்!

இந்த வருஷமும் அவனுக்குத் தீபாவளி ஜோக்கி ஏராளம். அவனிடம் ஏகப்பட்ட வேலை சேர்ந்து விட்டது. பட்டுத் துணிகளும், சீட்டித் துணிகளும் இன்னும் எத்தனையோ வித விதமான துணிகளும் வந்து குவிந்த வண்ணமா யிருந்தன. அவைகளை யெல்லாம் பார்க்கும்போது, “தீபாவளிக்கு இன்னும் பத்து தினங்கள் தானே இருக்கின்றன; அதற்குள் இவ்வளவு வேலையும் எப்படிச் செய்து முடித்துக் கொண்டுபோய் கொடுக்கப் போகிறேன்? எப்படி இந்தப் பொல்லாத அம்மாமாரிடம் நல்ல பெயர் வாங்கப் போகிறேனோ!” என்ற திகில் ஏற்பட்டது. தீபாவளி நெருங்க நெருங்க அவனுடைய திகிலும் அதிகமாகி வந்தது. ஆகவே, சாதாரணமாக விளக்கு வைக்கும் நேரத்தில் கடையைக் கட்டிவிட்டு வீட்டுக்குப் போகும் கன்னியப்பன் இரவு நேரங்களிலும் ‘பவர் விளக்கு’ வெளிச்சத்தில் வேலைசெய்ய ஆரம்பித்தான்!

ஒரு நாள் இரவு பத்து மணிக்குமேல் கடையைக் கட்டிவிட்டு, கன்னியப்பன் வீட்டுக்குப் போய்க்கொண் டிருந்தான். அந்த வேளையில் ஜவுளிக்கடை முதலாளி ஜிக்கி ஜம்புலிங்கம் செட்டியாரும் தம் கடையை மூடிவிட்டுத் தம் வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தார். வழியில் கன்னியப்பனைப் பார்த்ததும், “என்ன கன்னியப்பா! தீபாவளி ஜோக்கியா? வேலை ஜாஸ்தி போலிருக்குதே!” என்றார்.

## சினிமா ஸ்டுடியோவில்



"டைரக்டர் ஸார்! மீசை எப்படி?"

"ஆமாங்க; இந்த வருஷம் தீபாவளி வியாபாரம் எப்படிங்க?" என்று கேட்டான் கன்னியப்பனும்.

"இந்த வருஷம் ரொம்ப 'டல்'லப்பா! நானும் கடையைப் பத்து மணி வரைக்கும் திறந்து வைச்சுப் பார்க்கிறேன். இரண்டு பேர் சேர்ந்தாற்போல் வந்தாங்க, ஆளுக்குனு ஒரு ஐம்பது ரூபாய்க்கு வியாபாரம் பண்ணினாங்க என்பது கிடையாது" என்று அங்கலாய்த்தார் செட்டியார்.

அவருக்கு அனுதாபமாய் 'ஊ...ஹூங்' என்று சொல்லி விட்டு, கன்னியப்பன் வீட்டை நோக்கி நடையைக் கட்டினான்! "ஜவுளிக் கடையில் என்னவோ வியாபாரம் கிடையாதுங்குறாங்கோ; நம்ம கடையிலோ கொமாத் துணி சேர்ந்து போச்சு! இது எப்படிங்கிறதுதான் புரியல்லே" என்று யோசித்துக் கொண்டே அவன் வீட்டை யடைந்தான்.

"என்னுங்க நம்ம குப்புவுக்கு கவுனு தைச்சுகிட்டு வந்தீங்களா?" என்று ஆவலுடன் கேட்டாள் எல்லம்மாள்.

"இந்த பாரு, நாளைக்குக் கிடைக்கிற கூலியிலே ஒரு துணியை வாங்கி ஒரு கவுனு தைச்சு கொண்டு வந்துடறேன்" என்று சொன்னான்.

அவன் பதில் அவன் மனைவிக்குப் பரிபூரண திருப்தி யளிக்கவில்லை. இருந்தாலும் அதற்குமேல் அவன் பதில் சொல்லத் தோன்றாமல் அவனுக்குச் சோறு படைக்கும் வேலையில் ஈடுபடலானாள்.

மறுநாள் காலையில் ஜிக்கி செட்டியார் கடையில் நுழைந்து ஒரு கஜம் சிட்டித் துணி வாங்கிக்கொண்டு தன் கடைக்கு வந்தான். அவன் அருமைக் குழந்தைக்குச் சட்டை தைத்துத் தன் மனைவியை இன்று திருப்தி பண்ணிவிடலாம் என்று நினைத்துக் கொண்டு கடைக்கு வந்தான். தையல் மிஷினை எடுத்துத் திண்ணையில் வைத்தான். அவன் தைக்க வேண்டிய துணிகளை வைத்திருக்கும் பெட்டியை வெளியில் எடுத்து வைத்துத் திறந்தான். அவனுக்குத் 'திக்'கென்றது.

அந்தப் பெட்டியில் மேலாக ஒரு பச்சை வர்ண சில்க் துணிப் பொட்டணமிருந்தது. அதனுள் இன்னும் பல சிட்டித் துண்டுகள் சுற்றி வைத்திருந்தான். அந்தக் கட்டைப் பார்த்தவுடன் "ராமநாதன் தெரு அம்மா கொடுத்த தல்லவா? நான் நேற்றைக்கே அல்லவா தைத்துக் கொடுக்கிறேன் என்று சொல்லியிருந்தேன். சொன்ன வேளையில் கொடுக்கவில்லை என்றால் அந்த அம்மா ஓரே அடியாய்க் கத்தி, சண்டை பிடிப்பாளே!" என்று பயந்தான். இனி ஒரு விநாடி தாமதிப்பது கூடத் தவறு என்று உடனே வேலை செய்யத் தொடங்கினான்.

கொஞ்ச நேரம் கழித்து, "தெய்லர்! தெய்லர்!" என்று ஒரு மழலைக் குரல் வந்தது.

கன்னியப்பன் கடை வைத்திருந்த வீட்டில் குடியிருந்த ஏழைக் குடும்பஸ்தரின் குழந்தை சக்குவின் குரல்தான் அது. குழந்தைக்குச் சுமார் மூன்று வயதுதான் இருக்கும். பேச்சு மழலைப் பேச்சானாலும், பெரியவர்களைப் போல் விஷயத் தெளிவோடு பேசும். அதைக் கண்டு கன்னியப்பனுக்கு ஓரே வியப்பு. அதனாலேயே அந்தக் குழந்தையிடம் அவனுக்கு ரொம்பப் பிரியம்.

அன்று 'தெய்லர்' என்று அந்தக் குழந்தை கூப்பிட்டவுடன் 'டர்ர்ர்' என்ற அவனுடைய மிஷின் சத்தத்தையும் மீறி அவன் காதில் அமிர்தத்தைச் சொரிந்தாற் போலிருந்தது. உள்ளத்துக்குப் புது உவகை யளித்தது.

"என்னம்மா சக்கு?" என்றான் கன்னியப்பன்.

"வந்து...வந்து..." என்று சக்கு தட்டுத் தடுமாறிக் கொண்டு ஏதோ சொல்ல வாயெடுத்தாள்.

"துணித் துண்டுங்க வேணுமா, சக்கு?" என்றான் கன்னியப்பன். வண்ண வண்ண

மான புதுத் துணிகளைக் கண்டால் அவன் வெகு ஆவலுடன் சேகரித்துக் கொண்டு செல்வாள். அம்மாதிரிப் புதுத் துணித் துண்டுகள் கேட்கத்தான் வந்திருக்கிறாளோ என்று எண்ணினான் அவன்.

“ஆமாம்... இந்தத் துண்டுத் துணியினால் கவுனு தைக்க முடியும்?” என்றான்.

அவன் சொன்னமாதிரி. குரல் எல்லா வற்றிலிருந்தும் குழந்தைக்குத் தீபாவளியை முன்னிட்டுப் புதுச் சட்டைத் தைக்கவில்லை என்ற ஏக்கம் எவ்வளவு இருந்தது என்று புரிந்து கொண்டான். அந்த ஏக்கத்தைப் போக்க என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் மௌனமாக மிஷினை ஓட்டினான் கன்னியப்பன்.

“டெய்லர்! டெய்லர்! மாசக் கடைசின்னு என்ன டெய்லர்?”

“ஏன் அம்மா?”

“அப்பா மாசக் கடைசி, சட்டை தைக்க முடியாதுன்னு சொன்னு. மாசக் கடைசின்னு என்ன டெய்லர்?”

“மாசக் கடைசின்னு கையிலே பண மில்லே என்று அர்த்தம், சக்கு!” என்றான்.

அவ்வளவு சிறு வயதில் சாதாரணமாக எந்தக் குழந்தையும் புரிந்து கொள்ள முடியாத பல விஷயங்களைப் புரிந்து கொள்ளும் சக்கு, மாசக் கடைசிக்கும், பணமின்மைக்கும், சட்டை தைக்க இயலாமைக்கும் என்ன சம்பந்தம் என்று புரியாமல் தவித்தாள்.

* * *

இரவு வீட்டுக்கு வந்த கன்னியப்பனைப் பார்த்து, “இன்னுமா குழந்தைக்குத் தைச்சு ஆகவில்லை?” என்று கேட்டாள் கன்னியப்பனின் மனைவி.

“இதோ பார், சும்மா தொந்தரவு பண்ணாதே. ஊர் வேலை யெல்லாம் கையிலே ரொம்ப வந்திருக்கிறது. அதெல்லாம் முடிந்த பிறகுதான் நம்ம குழந்தைக்குச் சட்டையோ கவுனோ தைக்க முடியும்” என்று கண்டிப்பாகத் தெரிவித்து விட்டான்.

* * *

தீபாவளிக்கு முதல் நாள் காலை.

“என்ன டெய்லர்! இந்த தீபாவளிக்குத் தைத்துக் கொடுக்கிறதாக உத்தேசமில்லையா?” என்று சிலர் கேட்டார்கள்.

“உன்னால் தைக்க முடியவில்லை என்றால் ‘என்னால் முடியாது’ என்று அப்பவே சொல்கிறதுதானே? நாங்க வேறு யாரிடமாவது கொடுத்துத் தைத்துக் கொண்டிருப்போமல்லவா?” என்றார்கள் வேறு சிலர்.

“டைலர், டைலர்! முதலில் என் சட்டையை எடுத்துத் தையேன் ‘என் கால் சிராயைத் தையேன்’” என்று சிறுவர்களின் நச்சரிப்பு அதிகமாகி விட்டது.

ஆனால், கன்னியப்பன் எல்லாருக்கும் வெகு பொறுமையுடன், “இதோ ஆகிவிட்டது. நீங்கள் வீட்டுக்குப் போவதற்குள் கொண்டு வந்து தருகிறேன்” என்று சமாதானப்படுத்தி அனுப்பி வைத்தான்.

பத்து நாளாக இரவு பகல் விழித்து வேலை செய்ததால் அவனுடைய கண்கள் கோவைப் பழம் போல் சிவந்திருந்தன. உடம்பு ரொம்பவும் அலுப்பாக இருந்தது. வேலை செய்யவே முடியாது போலிருந்தது! ஆனால் அன்று அவன் வேலை செய்யத் தவறினால் எத்தனை பேருக்கு ஏமாற்ற மளிப்பான்! எத்தனை பேருடைய சந்தோஷத்தில் மண்ணைத் தூவினவனாவான்!

## நேரே நடந்த நாணயம்



ஆகவே, அன்று அவன் எப்படி வேலை செய்யாமலிருக்க முடியும்?

அன்று சாயங்காலம் சக்கு கடைப் பக்கமாக வந்தாள்.

"என்ன சக்கு! உன்னை இரண்டு நாளாகக் காணவே இல்லையே!" என்றான் கன்னியப்பன்.

"ஆமாம். நான் எதற்கு வருகிறதாம்? யாருக்கெல்லாமோ நீ சட்டை தைச்சு தைச்சுத் தருகிறாயாம். ஆனால் எனக்கு ஒரு கவுன் தருவாயா, என்ன? பின்னே எதற்காக வருகிறதாம்" என்றாள்.

இதைக் கேட்டவுடன் கன்னியப்பன் மனசு இளகிவிட்டது. கூடவே, தன் குழந்தையின் நினைவும் வந்தது. அவளுக்காக நாலு நாட்களுக்கு முன்னர் ஜிக்கி ஐம்புலிங்கம் செட்டியார் கடையில் ஒரு சீட்டி வாங்கி வைத்ததும் அதையும் தைக்கவேண்டும் என்பதும் ஞாபகம் வந்தது.

அன்று இரவு இரண்டு மணிக்கு அவன் வேலை முழுதும் முடிந்தது. இன்னும் ஒரு மணி நேரத்தில் மக்கள் எழுந்திருந்து மங்கள ஸ்நானம் பண்ண ஆரம்பித்து விடுவார்கள். குழந்தைகள் புதுத் துணிக்கு ஆவலாகக் காத்திருப்பார்கள் என்று எண்ணினான். ஆகவே, கன்னியப்பன் அந்த இரவு வேளையில் ஒவ்வொருவர் வீட்டுக்கும் சென்று தட்டி எழுப்பி அவரவர்கள் சட்டை, கவுன், பாவாடை முதலியவற்றைக் கொடுத்து விட்டு வந்தான். அதை வாங்கிக் கொண்ட அவர்களுடைய சந்தோஷத்தைப் பார்க்க கன்னியப்பன் அடைந்த மகிழ்ச்சி சொல்லி முடியாது.

கடைக்கு வந்தான். எல்லா வேலையும் முடிந்து விட்டதா என்று மற்றும் ஒரு முறை பார்த்தான். அவன் தன் குழந்தைக்கு வாங்கிவைத்த சீட்டி மட்டும் இருந்தது! 'இது ஒரு அரை மணி நேர வேலை' என்று சொல்லிக் கொண்டே மிஷினை ஓட்டினான்.

கவுன் தைத்தாகிவிட்டது. அவனுடைய மனசுக்குள் ஏதோ சஞ்சலம் புகுந்து கொண்டது. விளக்கை அணைத்து விட்டு, மிஷினைத் தூக்கி உள்ளே வைத்து விட்டு, சட்டையும் கையுமாக வீட்டை நோக்கிப் புறப்பட்டான். அப்பொழுது மணி மூன்றிருக்கும். வழியிலிருந்த ஜிக்கி ஐம்புலிங்கம் செட்டியாரின் கடையில் மின்சார விளக்கு எரிந்துகொண்டிருந்தது. கன்னியப்பன் ஒரு கணம் யோசித்து ஒரு முடிவுக்கு வந்தான்.

* * *

கன்னியப்பன் வீட்டை அடைந்தான். குழந்தை நல்ல நித்திரையில் ஆழ்ந்திருந்தது. கன்னியப்பன் வந்ததும் வாராததுமாக ஏதாகிலும் கேட்கும் எல்லம்மாள் முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். "என்ன, இன்னும் தலை முழுகவில்லை?" என்றான்.

"இல்லை" என்றாள்.

"ஏன்?" என்று சொல்லிக்கொண்டே அவன் குழந்தையை "குப்பு, குப்பு! எழுந்திரு! தீபாவளிக்கு எண்ணெய் தேய்த்து முழுகிப் புதுச் சட்டை போட்டுக்கோ" என்று எழுப்பினான்.

"என்ன, புதுச்சட்டை தைத்துகொண்டு வந்து விட்டீங்களா?" என்று வெகு ஆவலுடன் அவன் கையிலிருந்த பொட்டணத்தை வாங்கிப் பிரித்துப் பார்த்தாள். அதில் ஒரு புடவையும் ஒரு ஜோடி வேஷ்டியும் ஒரு சில்க் சட்டையுமிருந்தன. சில்க் சட்டையைப் பார்த்ததும் அவளுக்கு ஆனந்தம் நிலை கொள்ளவில்லை. ஆனால் கன்னியப்பனுக்கு ஒரே பயமாக இருந்தது. அந்தச் சட்டையின் கழுத்துப் பட்டையில் 'ஜிக்கிஸ்' என்ற எழுத்துக்களைப் பார்த்து விட்டு குழந்தைக்கு தன் கையால் தைத்த சட்டை யில்லாமல், தைத்து விற்கும் 'ரெடிமேட்' சட்டை வாங்கி வந்து விட்டதற்காகக் கோபித்துக் கொள்வாளோ என்று பயந்தான். நல்ல வேளை. அதை அவள் கவனிக்கவில்லை. "புது மாதிரியாக ரொம்ப நன்றாகத் தைத்திருக்கிறீர்களே?" என்று சொல்லியவாறே, அதை மடித்து வைத்து விட்டு, வெந்நீர் போடுவதற்காகச் சென்று விட்டாள் எல்லம்மாள். மனசை விட்டு ஒரு பெரிய பாரம் இறங்கியது போலிருந்தது கன்னியப்பனுக்கு.

மங்கள ஸ்நானத்தை முடித்துக்கொண்டு சில்க் சட்டை போட்டுக்கொண்டிருந்த தன் குழந்தை குப்புவைப் பார்த்தபொழுது கன்னியப்பனுக்குச் சக்குவின் ஞாபகம் வந்தது.

தன் குழந்தைக்கு என்று வாங்கித் தைத்த சீட்டிக் கவுனைச் சக்கு போட்டுக் கொண்டு எவ்வளவு சந்தோஷப்படுவாள்! குப்புவின் சட்டை சக்குவின் சட்டையாக மாறியதில் என்றுமடையாத இன்பம் அடைந்தான் டெய்லர் கன்னியப்பன்.




# சர்க்கார் பஸ்!

சென்னைவாசி

அவசரகாரியமாக சைனபஜாருக்குப் போவதற்காக அமிஞ்சிக்கரை (அமைந்த கரை) பஸ் ஸ்டாண்டுக்கு வந்தேன். அங்கே அரை பர்லாங்கு தூரம் நின்று கொண்டிருந்த 'க்யூ' வரிசையில் அடியேனும் போய் நின்றேன். அரைமணி நேரமாக நின்றேன். எத்தனையோ கார்கள் வந்தன. ஆனால் கவர்ன்மெண்டு பஸ் — 15-ம் நெம்பர் பஸ் மட்டும் வரவில்லை. பூந்தமல்லி ஹைரோட்டின் கிழக்குத் திக்கை நோக்கிச் சுமார் நாற்பது நிமிஷங்கள் தவம் புரிந்தோம். கடைசியில் யார் செய்த புண்ணியத்தாலோ பஸ் வந்தது. பஸ்ஸைப் பார்த்தவுடன் இதுவரையில் வரிசையாக நின்றுகொண்டிருந்தவர்கள் புலி பாய்வது போலப் பாய்ந்து ஒருவரை யொருவர் முட்டி மோதிக்கொண்டு நான் முந்தி நீ முந்தி என்று ஏறினார்கள். பஸ் நிறைந்து விட்டது. ஆனால் கூட்டம் குறையவில்லை.

வெளியில் இப்பொழுது முன்பு இருந்த கூட்டம் போலில்லை. பவுண்டன் பேனாவைப் பறிகொடுத்தவர்களும், மணி பர்ஸைக் 'கோட்டை' விட்டவர்களும், புத்தம் புதிய சொக்காயைக் கிழித்துக் கொண்டவர்களுமாக முகத்தில் அசடு வழிய நின்றார்கள்.

“வீட்டிலே வேறு சட்டையில்லை சார்! இந்தச் சட்டையும் கிழிந்து போய் விட்டதே!” என்று பரிதாபத்துடன் சொல்லிக்கொண்டிருந்தவரைப் பார்த்து “வரிசையாக ஏறக்கூடாதா? கூட்டத்தில் நெருக்கி அடித்து ஏறிவிட்டுச் சட்டை கிழிந்து விட்டது என்று வருத்தப்படுகிறீரே” என்று கேட்டேன்.

அவ்வளவுதான். அவர் தன் சட்டை கிழிந்ததையும் மறந்து என்மீது பாய ஆரம்பித்தார். “என்ன சார்! அரை மணி நேரமாகக் காத்துக் கொண்டிருக்கிறேன். இப்பொழுது வந்த ஒருவர் எனக்கு முன் ஏறுவது என்றால் நியாயமா? ஒன்று நமக்காவது மூளையிருக்கணும். இல்லை, பஸ் ஓட்டுகிறவர்களுக்காவது புத்தியிருக்கணும்” என்று கத்தினார்.

இதைக் கேட்டுக்கொண்டு என் அருகில் நின்றவர் “காங்கிரஸ் சர்க்காராம்! ஒரே ஊழல். இங்கு ஒரு போலீஸ்காரரைப் போட்டு வரிசையாக ஏறும்படி செய்தால் என்ன சார்? அதுதான் முடியாவிட்டால் வரிசையாக நின்று ஏறும்படி ஒரு ஸ்டாண்டாவது கட்ட வேண்டும். எல்லாருக்கும் அவசரமாக இருப்பதால்தான் முண்டியடித்துக்கொண்டு ஏறுகிறார்கள்” என்று ஆவேசத்துடன் பேசினார். எனக்கு மனதுக்குள் ஒரே பயம். நான் கதர் ஜிப்பாவும் அங்கவஸ்திரமும் போட்டுக் கொண்டிருந்தேன். இந்தச் சமயத்தில் மூன்று 15-ம் நம்பர் பஸ்கள் ஒன்றன்பின் ஒன்றாக ஒரே சமயத்தில் வந்து நின்றன. “பார்த்தீர்களா? பஸ் ஓட்டும் லட்சணத்தை! முக்கால் மணி நேரமாக பஸ் கிடையாது. இப்பொழுது மூன்று பஸ்கள் ஒன்றாக வந்து நிற்கின்றன. 'டைம் கீப்பர்' பஸ்ஸை விடும் லட்சணம், சார்!” என்று சொல்லிக்கொண்டே என்னை ஒரு தள்ளுத் தள்ளிக்கொண்டு தாவிக் குதித்து முதல் பஸ்ஸில் ஏறிக்கொண்டார்.

அவர் என்னைப் பிடித்துத் தள்ளிய அதிர்ச்சி முடிவதற்குள் இரண்டு பஸ்கள் நிறைந்துவிட்டன. மூன்றாவது பஸ்ஸில்

நாங்கள் ஒரு எட்டு ஒன்பது பேர் ஏறினோம். நான் ஒரு ஸீட்டில்போய் உட்கார்ந்தேன். அவ்வளவுதான். சொல்லுவதற்கு என்ன வெட்கம்? 'தொபுகட' என்று அந்த ஸீட்டிற்குள்ளேயே விழுந்தேன். நானும், நான் உட்கார்ந்திருந்த ஸீட் மெத்தையும் விழுந்ததில் எனக்குப் பின் ஸீட்டில் உட்கார்ந்திருந்தவர் காலில் நல்ல அடிபட்டுவிட்டது. என் லட்சணம் மட்டும் என்ன? அவர் என்னை வாயார வாழ்த்தினார். நான் செய்த புண்ணியம் இடுப்பு முறியவில்லை!

அந்த வண்டியிலும் ஒரு நல்ல மனிதர் இருந்தார். என்னை அன்போடு தூக்கிவிட்டு, "ஐயோ பாவம்! நீர் சிறு வயதாக இருந்ததால் இந்த மட்டும் போச்சு. வேறு யாராவது ஒரு தாய் தன் கைக்குழந்தையுடன் உட்கார்ந்திருந்தால் என்ன ஆகியிருக்கும்?" என்று சொல்லிவிட்டு, கண்டக்டரை கோபாவேசமாகப் பார்த்து, "ஏன் ஐயா, உட்காரும் ஸீட் உடைந்திருந்தால் ஜனங்களுக்குச் சொல்ல வேண்டாமா? அல்லது ஸீட்டில் உள்ள மெத்தையையாவது (மெத்தையா அது!) கழற்றி வைத்திருக்க வேண்டாமா?" என்று கேட்டார்.

"ஐயா! இது கவர்மெண்டு பஸ்ஸா. இதைப் பற்றி ஏதாவது சொன்னால் வேலை போய்விடும். நேற்றைக்குப் பாருங்கோ, ஒரு டிரைவர் 'பஸ் ஓடவில்லை. பெட்ரோல் அடைக்கிறது' என்று சொன்னார். மூன்று நாள் சஸ்பெண்டு செய்துவிட்டார்கள். இந்தப் பஸ்ஸிலாவது உடைந்துபோன ஸீட்டு பார்க்கவாவது இருக்கிறதே; எத்தனையோ பஸ்களில் உட்காரும் ஸீட்டே இல்லாமல் மாதக் கணக்காக ஓடிக்கொண்டுதான் இருக்கின்றன. ஆபீஸில் போர்மேன்களும், மெக்கானிக்குகளும் இருக்கத்தான் செய்கிறார்கள். இதையெல்லாம் யார் யார் கவனிக்கிறார்கள்? மணியைப் பார்த்துவிட்டு வீட்டுக்குப் போய்விடுகிறார்கள். வண்டியைப் பற்றி ஏதாவது குறை சொன்னால் நான் வெளியில் வேறு வேலை பார்த்துக்கொள்ள வேண்டியதுதான்!" என்று ஒரு பிரசங்கமே செய்துவிட்டார்.

"இதோ பாருங்களேன்: பஸ்ஸுக்குள் இரண்டங்குல மண் குவிந்து கிடக்கிறது. குப்பையும் கூளமும் ஐயய்ய ......... இதில் இரண்டுதரம் கால் பட்டாலே போதும். தானே காலரா வந்துவிடுகிறது. இந்த லட்சணத்தைப் பார்த்தால் பழைய 'ராமவிலாஸே' தேவலாம்" என்றார் பஸ்ஸில் உட்கார்ந்திருந்த இன்னொருவர்.

இதற்குள் பஸ்ஸும் கிளம்பிவிட்டது. வண்டி மேலும் கீழும் தூக்கிப் போட்டுக்கொண்டு ஓடிய ஓட்டத்திலே எனக்குப் பக்கத்திலிருந்தவர், "ஆஸ்பத்திரி மருந்தைக் குலுக்காமலேயே சாப்பிட்டுவிட்டு இந்த வண்டியில் உட்கார்ந்தால் போதும். தானே குலுக்கிக் கொள்ளும்" என்று சொன்ன ஹாஸ்யத்தைக் காரின் 'கடபுட' சத்தத்தில் புரிந்துகொள்வதே கஷ்டமாகப் போய்விட்டது. சர்க்கார் பஸ்கள் அவ்வளவு கடகடத்துப் போய்விட்டன.

"இதையெல்லாம் சர்க்கார் கவனிக்கிறார்களா? புதுப் புது ஆட்களை நியமிப்பதற்கு எவ்வளவு லஞ்சம் கிடைக்கும். பழைய ஆட்களை எப்படிக் குற்றம் சொல்லித் தள்ளலாம் என்று அந்த 'டிரான்ஸ் போர்ட்' ஆபீஸில் உள்ளவர்கள் நினைக்கிறார்களே தவிர, பஸ் கெட்டு வீணாகாமல் சுத்தமாக இருக்க வேண்டுமே; ஜனங்கள் சௌகரியமாகப் பிரயாணம் செய்ய வேண்டுமே என்று யார் கவலைப் படுகிறார்கள்? பஸ்கள் வாங்கி ஒரு வருஷத்திற்குள் இப்படிச் சீர்குலைந்திருப்பதை ஒரு முதலாளி பார்த்தால் கண்ணீர் விடுவான், ஐயா! பொதுப் பணம்தானே! எக்கேடு கெட்டால் என்ன?" என்று சொல்லிக் கொண்டே ஒரு பிரயாணி 'கெங்குரெட்டி' ஸ்டாப்பிங்கில் இறங்குவதற்காக எழுந்தார். அவர் உட்கார்ந்திருந்த ஸீட்டின் மெத்தையில் உள்ள ஸ்பிரிங் அவர் வேஷ்டியை த-ர்-ர்ரென்று கிழித்துவிட்டது. வண்டியிலிருந்த சிலர் 'குபீர்' என்று சிரித்து

## வண்ணான் துறையிலே....!



"நண்பா, நீ சர்ச்சிலைப் போல உடை உடுத்திக் கொள்ளலாம். ஆனால், அவரைப் போலப் பிரசங்கம் செய்ய முடியாதே!"

விட்டனர். அவருக்கு வந்த கோபத்துக்கு எல்லையில்லை. "சர்க்கார் பஸ்ஸாம், பொதுப் பணத்தைக் குட்டிச்சுவராக்கு கிறார்கள். இதற்கு ஒரு மந்திரி, அவருக்குக் கீழே வேறு ஆபீஸர்கள். ஆ......... பீஸர்கள்........." என்று இன்னும் என்னென்னவோ சொல்லிவிட்டுப் போனார். அவர் சொன்னதை யெல்லாம் எழுதித் தமிழைக் கெடுக்க எனக்கு இஷ்டமில்லை.

இதை யெல்லாம் காதில் வாங்கிக் கொள்ளாமல் அந்தக் கடகடத்த பஸ் 'திமுர் திமுர்' என்று விழுந்து ஓடிக் கொண்டிருந்தது. "பார்த்தீர்களா!" என்று எதிர் ஸீட்டில் உட்கார்ந்திருந்த ஒருவர் வெளியில் கையைக் காட்டினார். அங்கிருந்த பஸ் ஸ்டாண்டில் பஸ்ஸுக்காக ஏழெட்டுப் பேர் காத்துக் கொண்டிருந்தனர். "இதுபோல வழியில் உள்ள எத்தனையோ ஸ்டாண்டுகளில் ஜனங்கள் காத்துக்கொண்டிருக்கின்றனர். இதற்கு அதிக பஸ் விட வழியில்லை. பத்திரிகைகளில் '300 பஸ் வரை சர்க்காரின் சர்வீஸில் இருக்கிறது' என்று பிரமாதமாக விளம்பரப் படுத்திக் கொள்கின்றனர். அங்கே ஷெட்டில் போய்ப் பாருங்கள். நூற்றுக் கணக்கான பஸ் ஓடாமலேயே வெட்ட வெளியில் கிடக்கிறது. பஸ் சர்வீஸ் நடத்துகிறார்களாம், பஸ் சர்வீஸ்" என்று மூச்சுவிடாமல் சத்தம் போட்டார்.

"அது கிடக்கட்டும் ஸார்! ஏற்கனவே பாரிஸ் கார்னரிலிருந்து அம்ஞ்சிக்கரைக்கு 0-1-6 அணா டிக்கட்டு. இப்பொழுது 0-2-0 அணா. சர்க்கார் பஸ்ஸை ஓட்டினால் பழையபடி 0-1-6 அணாவுக்குக் குறைப்பார்கள் என்று நாங்கள் எல்லாம் எதிர்பார்த்தோம். என்னடான்னா, பஸ் கட்டணத்தை ஓசத்தப் போறாங்களாம். இவங்களா ஸார், ஜனங்களுக்கு ஒத்தாசைப் பண்ணப் போறாங்க!" என்று ஒரு வயசானவர் வாயிலே வந்தபடியெல்லாம் சர்க்காரை வாழ்த்திவிட்டு "என்ன சொல்றீங்க?" என்று தன் பக்கத்திலிருந்தவரைப் பார்த்துக் கேட்டார்.

இதுவரையில் பேசாமல் இருந்த அந்த மனிதரை இந்தக் கிழவர் ஏதாவது பதில் சொல்லாவிட்டால் விடமாட்டார் போலிருந்தது. "நீங்க சொல்லுகிறதெல்லாம் நிஜம்தான். பஸ் சர்வீஸை சர்க்கார் எடுத்துக் கொண்ட கொஞ்ச காலத்துக்கெல்லாம் லக்ஷக் கணக்கில் லாபம் வருகிறதாகப் பொக்கிஷ மந்திரிகூட சட்டசபையில் சொன்னார். எடுத்துக்கொண்ட தொழிலை ஒழுங்காக நடத்த முடியவில்லை. அதற்குள்ளேயே பணம் பறிக்க ஆரம்பித்து விட்டார்கள். இதற்கு நாமெல்லாம் ஒரு வழி செய்யத்தான் வேணும்" என்று கூறி பஸ்ஸில் உட்கார்ந்திருந்தவர்கள் எல்லாரையும் ஒரு பார்வை பார்த்தார். பஸ் 'டக்' கென்று மூர்மார்க்கெட்டில் நின்றது. "அடாடா! நான் டிராம் ஷெட்டிலேயே இறங்க வேண்டுமே" என்று சொல்லிக் கொண்டே இறங்கிவிட்டார் அவர்.

இதுவரையில் என் அருகில் பொறுமையாக உட்கார்ந்திருந்தவர் மெதுவான குரலில், "நான் ஒரு டைம்கீப்பர் சார்!" என்ற பீடிகையோடு பேச ஆரம்பித்தார். "பஸ் ஸ்டாண்டில் எங்களுக்கென்று ஒரு இடம் கிடையாது. பிளாட்பாரத்திலே தான் உட்கார்ந்திருக்க வேண்டும். மழை, வெய்யில், மரத்தின் மீது உட்கார்ந்திருக்கும் காகத்தின் எச்சம் எல்லாம் எங்கள் தலைமேலேதான். இதை யெல்லாம் ஆபீஸில் சொன்னால் 'இஷ்டமிருந்தால் வேலையைப் பாரு! இல்லாவிட்டால் போ!' என்று சொல்லுகிறார்கள். அதுதான் போகிறது. குடிப்பதற்குத் தண்ணீர் வசதிகூடக் கிடையாது. சம்பளம் தான் போதுமானபடி கொடுக்கவில்லை என்றால் தொழிலாளிகளுக்கு வேண்டிய வசதிகளையாவது செய்து கொடுக்கக் கூடாதா, சார்? சுதந்தரமாவது, சர்க்காராவது? எல்லாம் கள்ள மார்க்கெட்காரர்களுக்கும், பணக்காரர்களுக்கும் தான்!" என்று அந்தத் தொழிலாளி சொல்லிக்கொண்டிருக்கும்போதே நான் இறங்க வேண்டிய இடம் வந்து விட்டது. இறங்கினேன்.

என்னோடு இன்னொரு மனிதரும் இறங்கினார். அவர் என் அங்க வஸ்திரத்தின் தலைப்பைப் பிடித்து இழுத்துச் சொன்னார்:— "அவன் சொன்னதை யெல்லாம் நீங்கள் நம்பி விடாதீர்கள். இது ஒரு பெரிய சூழ்ச்சி. டிரைவர்களும் கண்டக்டர்களும் டைம்கீப்பர்களுமாகச் சேர்ந்து பஸ்களை நாசம் செய்யும் அக்கிரமத்தைச் சொல்லி முடியாது. இந்த லட்சணத்தில் ஓயாமல் காங்கிரஸ் மந்திரிகளைத் திட்டிக்கொண்டேயிருக்கிறார்கள். சர்க்கார் பஸ் விடும் திட்டம் வெற்றியடையக் கூடாது என்பதில் சில முதலாளிகள் சிரத்தை கொண்டிருக்கிறார்கள். அவர்கள் லஞ்சம் கொடுத்து இப்படி யெல்லாம் அட்டூழியம் பண்ணச் சொல்லுகிறார்கள்."

இப்படிச் சொல்லிக்கொண்டே இன்னொரு பஸ்ஸில் இடம் பிடிக்க அவர் ஓட்டமாய் ஓடினார்!

எது உண்மை? யார்பேரில் குற்றம்? மொத்தத்தில் சர்க்கார் பஸ்ஸை ஓட்டுகிறவர்கள், சர்க்கார் பஸ்ஸில் ஏறுகிறவர்கள் எல்லாருமே புகார் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். இந்தப் புகார்களின் உண்மைக் காரணந்தான் என்ன?

சென்னை

# அகில இந்திய கதர் & சுதேசி பொருட் காட்சி சாலையிலும்




**போனிக்ஸ்**

பங்கா

மாடல் - 1948

ஸ்டால் நெம்பர் முதலிய பூரா விவரங்களும் பின்னர் அறிவிக்கப்படும்

வட ஆற்காடு, கோயமுத்தூர் ஜில்லாக்களுக்கும் மைசூர் சமஸ்தானத்திற்கும் சப்-டீலர்கள் தேவை

விவரங்களுக்கு :

## ஆர்எம். எஸ். & கம்பெனி. லிமிடெட்

தென் சென்னைப் பிராந்தியங்களுக்கும் (சென்னை நகரம், சுதேச சமஸ்தானங்கள் உள்பட) பூரண விற்பனை உரிமையாளர்கள்

**16, பிராட்வே : மதராஸ் - 1**

போன் : 4060 தந்தி : "AREMESCO"

# இதய நோயா?

...என்ன செய்யவென்று கூறுவேன்



இவ்வுபாதைகள்
[illegible] வேண்டாம். மிக அசாதாரணமாகவும், உணவுக்குப் பின் வயிற்றில் அதிர ணம், உப்புச உணர்வுகளுக்கும் அமிலத்தின் [illegible] இவ்வுபாதைகள் ஏற்படுகின்றன. [illegible] அமிலங்களுக்கு மாற்று, எப்போதும்போல ஜீரணசக்தி யளிப்பது. என் உபகதிதத பிஸ்மாக [illegible] செய்கிறேன். [illegible] இடைஞ்சலற்ற ஜீரணமாக [illegible]. இன்று பரீக்ஷியுங்கள்

உங்களுக்கு வேண்டியது

**BISMAG**

எல்லா கெமிஸ்டு களிடமும் ஸ்டோர்களிலும் பவுடராகவும் மாத்திரையாகவும் கிடைக்கும்.

சோல் ஏஜண்டுகள் :

ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிட்.

பம்பாய்-கல்கத்தா-மதராஸ்-லாகூர்

# எனது ஆல்பத்தில் ஒரு பக்கம்!

போட்டோ ஆல்பத்தின் ஒவ்வொரு பக்கமும் கவர்ச்சிகரமாக விளங்க என்ன வேண்டும்?

தேவைகள் மிகவும் சுலபமானவை. எளிதில் கிடைப்பவை.

முதலாவதாக ஒரு கேவார்ட்ஸ் ரோல் பிலிம் அல்லது பிளேட்.

இரண்டாவதாக ஒரு கேவார்ட்ஸ் பேப்பர் இவைகளே.



இந்தியாவில் மொத்த விற்பனையாளர்கள்:

அல்லைட்
போட்டோ கிராபிக்ஸ்
லிமிடெட்

பம்பாய் - கல்கத்தா - மதராஸ்

# யாரும் பிரமிக்கிறார்கள்

"அதைவிட விலை அதிகமல்லவா"

என்கிறார்கள்

உண்மையில் அப்படியில்லை. இது வரை உற்பத்தி செய்யப்பட்ட பௌண்டன் பேனாக்களுள் மதிப்பிற் சிறந்தது புதிய கோல்டன் ப்ளாட்டினம் பேனாதான். என்கிரேவ் செய்த மூடி - பல்வேறு வர்ணக் கவர்ச்சி - இயாதி வாய்ந்த ப்ளாட்டினம் மூள், ஆகியவைகளுடன் கூடிய இந்த நவநாகரிகப் பேனாவை உபயோகித்தால்தான் நம்ப முடியும்.

## புதிய

## கோல்டன்

ரூ. 5/-

# Platignum

பௌண்டன் பேனா

இங்கிலாந்தில் செய்யப்பட்டது

வர்த்தக விசாரணைகளுக்கு முழு உரிமை பெற்ற வினியோகஸ்தர்கள்:

மூல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்

16, தம்புசெட்டி தெரு, மதராஸ்

அவள் துணிகள் இப்பொழுது
எவ்வளவு சுத்தமாகவும்
பளிச்சென்றும்
காண்கின்றன

அது ஸன்லைட்
டினால் தான்!



ஸன்லைட்
சோப்






## கவர்ச்சியான ரகங்கள் நவீன (1948) மாடல்கள்




எல்லாம் ஸ்விஸ் தயாரிப்பு — உயர்ந்த லீவர் — 3 வருட உத்தரவாதம்

| (நெ. 1 & 2 (ஷொக் ப்ரூப்) | | நெ. 3 லேடி ஸ்ட் வாட்ச் | | நெ. 4 தட்டை உருவம் | |
|---|---|---|---|---|---|
| க்ரோம் 5 ஜுவல் | ரூ. 40/- | 4 ஜுவல் க்ரோம் | ரூ. 49/- | 4 அல்லது 5 ஜுவல் க்ரோம் | ரூ. 25/- |
| கபீகியர் 7 ,, | ரூ. 45/- | 7 ,, ,, | ரூ. 55/- | ,, சென்டர் செகன்டு | ரூ. 32/- |
| ரோல்டு கோல்டு | ரூ. 48/- | 7 ரோல்டு கோல்டு | ரூ. 65/- | ,, ரோல்டு கோல்டு | ரூ. 46/- |
| ,, கபீகியர் | ரூ. 62/- | 15 ஜுவல் க்ரோம் | ரூ. 80/- | 7 ஜுவல் கபீகியர் | ரூ. 52/- |
| 15 ஜுவல் க்ரோம் | ரூ. 70/- | 15 ரோல்டு கோல்டு | ரூ. 110/- | 15 ,, க்ரோம் | ரூ. 40/- |
| 15 ரோல்டு கோல்டு | ரூ. 80/- | 15 9 காரட் கோல்டு | ரூ. 160/- | 15 ,, ரோல்டு கோல்டு | ரூ. 65/- |

பாக்கிங் தபால் செலவு தனி. ஆர்டர் செய்யும்போது கடிகார நம்பர் குறிப்பிட்டு எழுதவும்.

**H. DAVID CO., Post Box No. 11424, CALCUTTA**

**எச். டேவிட் கம்பெனி, தபால் பெட்டி நெ. 11424, கல்கத்தா**

REGD. NO. M. 4392

# ஸ்டே ப்ரைட் பாத்திரங்கள்

**பம்பாய் தேவிநயாள் கம்பெனியார்**

*தயாரித்தவை*

**வெள்ளியின் அந்தமும் இரும்பின்**
**உறுதியும் ஒருங்கே கொண்டவை**

***அக்டோபர் மாதம் முதல் தேதியிலிருந்து***
***விலைகள் மிகவும் குறைக்கப்பட்டுள்ளன***

| | | | |
|---|---|---|---|
| தட்டுகள், பம்பாய் அடுக்குகள் | | | |
| பவுண்டு ஒன்றுக்கு | | ரூ. | 9/- |
| குத்தடுக்குகள் | ... | ரூ. | 10/8 |
| இதர சாமான்கள் | ... | ரூ. | 10/- |

*எவர்ஸில்வர் பாத்திரங்கள் என்று இதுவரை வழங்கிவந்தது*
*இனி ஸ்டே ப்ரைட் பாத்திரங்கள் என அழைக்கப்படும்.*

*

வெளியூர்களில் கிடைக்குமிடம் :

ஜோதி மெடிகல் ஸ்டோர்ஸ்
திருவண்ணாமலை

இந்தியன் டிரேடிங் கம்பெனி
மலைவாசல், தெப்பக்குளம்,
திருச்சிறுப்பள்ளி

ஸ்ரீ அபயாம்பிகா ஸ்டோர்ஸ்
நெ.2, மாயூரம் ரோடு, மாயவரம்

எம். வி. எம். ஸ்டோர்ஸ்
கும்பேஸ்வரர் சன்னதி,
கும்பகோணம்

சூடாமணி ஸ்டோர்ஸ், தேவக்கோட்டை

*

சமஸ்தானங்கள் உள்பட தென்னிந்தியா
சிலோனுக்குப் பூரண விநியோகஸ்தர்கள் :

# ஸாம்ஸன் & கோ., லிமிடெட்

8-22, பிராட்வே (போன் : 4521) மதராஸ்